# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

நவம்பர்—1983 கார்த்திகை

தீபாவளிச் சிறப்பிதழ்





விலை 1/50 காசு

## மூன்று நாள் அந்தர்யோகம்

தூய அன்னை ஸ்ரீசாரதாதேவியாரின் 131-ஆவது ஜயந்தி விழா டிசம்பர் 26-ஆம் நாள் திங்கட்கிழமை வருகிறது. அதையொட்டி டிசம்பர் 24,25,26 ஆகிய தேதிகளில் சென்னை, ஸ்ரீராமகிருஷ்ண மடத்தில் மூன்று நாள் அந்தர்யோகம் நடைபெறும். அதில் கலந்து கொள்ள விரும்புவோர் 'மேனேஜர், ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 004' என்ற முகவரிக்குக் கடிதம் எழுதித் தங்கள் பெயரைப் பதிவு செய்து கொள்ளவும்.





பக்கம் 40 உ. நிலவரம்
(பழைக்கரிமைக்கது)

# ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 004

## 1983 நவம்பர் மாத நிகழ்ச்சிகள் சில

| | | |
|---|---|---|
| 4-11-83 | வெள்ளிக்கிழமை | தீபாவளி (இரவு வழிபாட்டிற்குப் பிறகு காளி பூஜை) |
| 17-11-83 | செவ்வாய் | சுவாமி சுபோதானந்த ஜயந்தி |
| 19-11-83 | சனி | சுவாமி விஞ்ஞானானந்த ஜயந்தி |

நவம்பர் 1,16,30 ஆகிய ஏகாதசி தினங்களில் மாலை வழிபாட்டிற்குப் பிறகு ஸ்ரீராமநாம சங்கீர்த்தனம் நடைபெறும்.

சத் சங்கம்: ஞாயிறுதோறும் மாலை 4 மணி முதல் 5-30 மணி வரை

1. ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமம்—வி. ஆர். கல்யாணசுந்தர சாஸ்திரிகள் (நவம்பர் 6)
2. ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம்—வி. ஆ. வி. குருஸ்வாமி சாஸ்திரிகள் (நவம்பர் 13)
3. ராமாயணம்—ஆர். கோதண்டராமன் (நவம்பர் 20, 27)

மாலை 5-30 மணி முதல் 6-30 வரை சுவாமி பீதாம்பரானந்தர் 'ஸ்ரீமத் பாகவதம்' என்ற தலைப்பில் ஞாயிற்றுக்கிழமைகளில் ஆங்கிலத்தில் உரை நிகழ்த்துவார்.

**மடத்தின் சார்பாக வழக்கமாக சென்னையில் நடைபெற்று வரும் வாரநாட்களில் நடைபெறும் சொற்பொழிவுகள், மற்றும் வேறு சில நிகழ்ச்சிகள் சொற்பொழிவுகள் அனைத்தும் நவம்பர் மாதத்திலும் எப்போதும்போல் நடைபெறும்,**

தொகுதி 63 | நவம்பர்—1983 ருதிரோத்காரி ஹூ கார்த்திகை மீ | இதழ் 11

பொருளடக்கம்



ஆயுள் சந்தாதாரராகச் சேருவதன் மூலம் **ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்** பத்திரிகையின் வளர்ச்சிக்கு உதவுங்கள்.

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

(மாதப் பத்திரிகை)

இந்தப் பத்திரிகைக்கு ஏஜெண்டுகள் நியமிக்கப்படாத ஊர்களுக்கு ஏஜெண்டுகள் தேவை. முன்பணம் கட்டக்கூடிய பத்திரிகை விற்பனையாளர்கள் தொடர்பு கொள்ளவும்.

**சந்தா விவரம்**

| | |
|---|---|
| வருட சந்தா | ரூ. 15 |
| ஆயுள் சந்தா | ரூ. 180 |
| தனிப் பிரதி | ரூ. 1-50 |

*ஆயுள் சந்தாவை மொத்தமாகவோ, பகுதி பகுதியாகவோ, மாதம் ரூ. 15 ஆகவோ ஒரு வருடத்திற்குள் செலுத்தலாம்.*

*வருட சந்தாதாரர்களை ஆயுள் சந்தாதாரர்களாகப் பதிவு செய்து கொள்வதன் மூலம் பத்திரிகையின் வளர்ச்சிக்கு உதவி புரியக் கோருகிறோம். ஆயுள் சந்தா என்பது 35 ஆண்டுகளுக்குப் பத்திரிகை அனுப்பப்படும் என்பதை குறிக்கிறது.*

**வேண்டுகோள்**

1. மக்களுக்கு உணவு உடை வழங்கி உடல் சம்பந்தமான தேவைகளைப் பூர்த்தி செய்வது மிகவும் நல்ல உதவி ஆகிறது. கல்வி, தொழில் முதலியவற்றைக் கற்பித்து ஜீவனோபாயத்திற்கு வழிவகுத்துத் தருவது அதனினும் மேலான சேவை ஆகிறது. ஆன்மிக சம்பந்தமான நூல்களைப் படித்தும் கேட்டும் ஆத்மசாதனங் களில் ஈடுபடச் செய்வது தலையாய கைங்கரியமாகிறது. தானங்களிலேயே மிகச் சிறந்த தானம் ஞானதானம் என்பது ஆன்றோர் கண்ட உண்மை.

வாசக அன்பர்கள் தங்களின் சந்தாவைச் செலுத்துவதுடன், மேலும் தமது நண்பர்கள் சிலரையும் சந்தாதாரர்களாகச் சேர்த்துத் தருவது ஒரு நல்ல தொண்டாகும். இந்தப் புனித மதத் தொண்டில் சிரத்தையுடன் ஈடுபடுவது நமக்கும் மற்றவர்களுக்கும் பெருநலன் தரும்.

2. அன்பர்கள் தங்களின் தெய்விகக் கைங்கரியமாக கல்வி ஸ்தாபனங்கள், சத்சங்கங்கள் முதலியவைகளுக்குப் பத்திரிகை போய்க்கொண்டிருக்கும்படி செய்ய லாம். இது ஒவ்வொரு மாதமும் தாங்கள் அளிக்கும் மேலான நன்கொடையாகவும், தங்களை ஞாபகப்படுத்தும் சிறந்த வெகுமதியாகவும் அமையும்.

3. அன்பர்கள் தங்களால் இயன்ற ஒரு சிறிதளவிற்காகிலும் புதிய சந்தா தாரர்களைச் சேர்த்துத் தரும் விஷயத்தில் முயற்சி செய்வார்கள் என்று நம்புகிறோம். குறைந்தது மூன்று சந்தாதாரர்களையாவது சேர்த்துத் தருவது மிகப் பெரிய உபகாரமாக இருக்கும். இதன் மூலம் இன்றைய சமுதாயத்தின் சூழ்நிலையில் நல்ல கருத்துகள் வளர அரும்பெரும் தொண்டு செய்தவர்களாகிறீர்கள்.

4. புதிய சந்தாதாரர்கள் பணம் அனுப்பி வைக்கும்போது புதிய சந்தா என்று குறிப்பிட்டு எழுதும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். பழைய சந்தாதாரர்கள் தமது கடிதப் போக்குவரத்துகள் எல்லாவற்றிலும் சந்தா எண்ணையும் முழு விலாசத்தையும் அவசியம் குறிப்பிட்டு எழுத வேண்டுகிறோம்.

தொலைபேசி : 71231



விவரங்களுக்கு:
ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் காரியாலயம்
ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர் : சென்னை-600 004

உ

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்



ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன் இல்லை. —திருமூலர்



## பிரார்த்தனை

अर्काभामरुणाम्बरावृततनूमानन्दपूर्णाननां
मुक्ताहारविभूषितां कुचभरानम्रां सकाञ्चीगुणाम् ।
देवीं दिव्यरसान्नपूर्णकरकामम्भोजदर्वीकरां
ध्यायेच्छङ्करवल्लभां त्रिनयनामम्बां प्रलम्बालकाम् ॥

அர்க்காபா-மருணாம்பராவ்ருததனூ-மானந்த-பூர்ணானனாம்
முக்தாஹார-விபூஷிதாம் குசபராநம்ராம் ஸகாஞ்சீகுணாம் ।
தேவீம் திவ்யரஸான்ன-பூர்ணகரகா-மம்போஜதர்வீகராம்
த்யாயேச் சங்கரவல்லபாம் த்ரிநயனா-மம்பாம் ப்ரலம்பாலகாம் ॥

சூரியனைப் போன்று ஒளி பொருந்தியவளும், சிவப்பு ஆடையணிந்த மேனியை உடையவளும், மகிழ்ச்சி நிறைந்த முகமுடையவளும், முத்துமாலை அணிந்தவளும், தங்கமேகலை அணிந்தவளும், தெய்விகச் சுவை பொருந்திய அன்னம் நிறைந்த பாத்திரத்தையும், அகப்பையையும், தாமரைப்பூவையும் கையில் கொண்டவளும், முக்கண்ணுடையவளும், நீண்ட கூந்தலை உடையவளும், சங்கர பத்தினியுமாகிய அம்பிகையைத் தியானிக்கிறேன்.

எல்லா உலகமுமானாய் நீயே, ஏகம்பம் மேவி இருந்தாய் நீயே,
நல்லாரை நன்மையறிவாய் நீயே, ஞானச் சுடர்விளக்காய் நின்றாய் நீயே,
பொல்லா வினைகளறுப்பாய் நீயே, புகழ்ச் சேவடி என் மேல் வைத்தாய் நீயே,
செல்வாய செல்வம் தருவாய் நீயே, திருவையாறகலாத செம்பொற் சோதி.

—திருநாவுக்கரசர்

சிறப்புக் கட்டுரை

# தீபாவளித் தத்துவம்

**- சுவாமி கமலாத்மானந்தர்**

தீபாவளி ஐப்பசி மாதத்தில் சதுர்த்தசி திதியில் வருகிறது. அன்று அனைவரும் எண்ணெய் ஸ்நானம் செய்து புத்தாடை அணிந்து, தீபமேற்றி, லட்சுமிபூஜை செய்து, அனைவருக்கும் இனிப்பு வழங்கிக் கொண்டாடுகின்றனர்.

ஐப்பசி மாதம் சரத்ருதுக் காலம். சரத்ருது பிருதிவி தத்துவம். அப்போது பூமியில் எங்கும் பழையவற்றைக் களைந்து சிருஷ்டியைத் துவங்கும் நேரம். சரத்ருதுவை இலையுதிர்காலம் என்றும் சொல்வார்கள். அப்போது மரம் செடி கொடிகளெல்லாம் தமது பழைய இலை, சருகுகளை நீக்கிப் புதிய உற்பத்திக்கு—வரப்போகும் வசந்த காலத்திற்குத் தம்மைத் தயார் செய்துகொள்கின்றன.

அது போல், மனித உள்ளத்திலும் இலையுதிர்காலம் புத்துணர்ச்சியை ஏற்படுத்துகிறது. அதை உணர்த்தும் வகையில், புறச் சின்னமாக நாம் அன்று புத்தாடைகளை அணிகிறோம்.

மேலும், ஐப்பசி மாத அமாவாசைக்கு முன்தினமான சதுர்த்தசி திதியைத் தீபாவளிக்குரிய நாளாகத் தேர்ந்தெடுத்திருப்பதிலும் பொருள் உண்டு. ஏனென்னில் அமாவாசை என்பது ஞான முடிவின் நிலையைக் குறிக்கிறது. சந்திரன் மனதிற்கு அதிபதி. எவவே சந்திரனின் வளர்ச்சிக்கும் தேய்வுக்கும் ஏற்ற வகையில், மக்கள் மனநிலை மாறுகிறது. அமாவாசைத் தினத்தில் மனம் ஆன்மாவில் சென்று அடங்கியிருக்கும். அதனால்தான் மந்திரங்களை, அமாவாசைத் தினத்தில் அதிகமாக ஜபிக்கின்றனர்.

எனவே அமாவாசைக்கு முதல் நாள் சதுர்த்தசி என்பது, மனம் ஆத்மாவில் அடங்கி ஞானநிலையை அடைவதற்கு முந்திய நிலையைக் குறிக்கிறது. சதுர்த்தசி என்பது பதினான்காம் நாள். அன்று மனித உடலில் குடிகொண்டிருக்கும் ஜீவாத்மாவைப் பந்தப்படுத்த வல்ல, பழைய வாசனைகளிலிருந்து விடுவித்து, மீண்டும் புத்துயிர் பெறச்செய்து முடிவான ஞானநிலையை நோக்கிச் செலுத்த வேண்டும் என்ற தத்துவம் அடங்கியுள்ளது.

அன்று கங்கா ஸ்நானம் செய்வது என்பது ஞானஸ்நானம் செய்வதாகும். கங்கை என்பது ஞான வாரிதியை உணர்த்துகிறது.

அன்று தைல ஸ்நானம் அதாவது எண்ணெய் ஸ்நானம் செய்வது, ஆன்மாவைத் தாங்கும் கோவில் போல விளங்கும் உடலைப் பேணுவதாகும்.

தைலம் என்பதற்கு ஸ்நேகம், எண்ணெய் என்பது பொருள். எனவே தைல ஸ்நானம் உடலுக்கும் ஆன்மாவுக்கும் உள்ள ஸ்நேக பாவனையை-ஆன்ம சகோதரத்துவ பாவனையை நினைவுபடுத்துவது.

தீபாவளியன்று லட்சுமிபூஜை செய்கிறோம். இது செழிப்புநிலையை அதாவது ஆன்மிகச் செழிப்பு நிலையையும் உலகியல் வாழ்க்கையின் செழிப்பு நிலையையும் உணர்த்துவதாகும்.

தீபாவளிதினத்தில் வரிசையாகத் தீபமேற்றுவது என்பது ஞான ஒளியைக் காட்டுகிறது. தீபத்தின் பிரகாசம்

என்பது ஆத்மா பிரகாசமானது, சோதி மயமானது என்பதைக் குறிப்பிடுகிறது. பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் காசிக்குச் சென்றபோது காசி க்ஷேத்திரம் முழுவதும் பொன்போல் ஒளிர்வதாக ஒரு ஞானக் காட்சியில் கண்டார். காசி என்ற சொல்லுக்குப் பிரகாசம் என்று பொருள். ஆத்மப் பிரகாசத்தின் புறத்தோற்றமாகக் காசி க்ஷேத்திரம் விளங்குகிறது. தீபாவளி சமயத்தில் அம்பிகை தங்க அன்னபூரணியாகக் காசியில் தரிசனம் தருகிறுள்.

ஸ்ரீராமகிருஷ்ணர் தாம் முதல்முதலாகப் பெற்ற காளிதேவியின் தரிசனத்தின்போது, சோதியலைகள் தம்மைச் சூழ்ந்ததாகக் குறிபிட்டுள்ளார். பொன், பிரகாசம் ஆகியவை ஆத்மப்பிரகாசத்தையே உணர்த்துகின்றன. இதயத்தில் கட்டைவிரல் அளவில் ஆத்மா ஜோதிர் மயமாக விளங்குகிறது என்பது போன்ற கருத்துக்கள் உபநிஷதங்களில் இடம் பெற்றுள்ளன. ஒருவன் நல்லவன் என்ற பொருளில் 'அவன் தங்கமானவன்' என்று சொல்கிறோம். அவ்விதம் சொல்லும் போது 'தங்கமானவன்' என்பது அந்த மனிதனின் உண்மைச் சொரூபமான ஆத்மப் பிரகாசத்தையே சுட்டுகிறது. இது பாமர மக்களிடையேயும் வழங்கி வரும் ஒரு வேதாந்தக் கருத்தாகும்.

இல்லற வாழ்க்கையை மேற்கொண்டவர்கள் விருந்தினரை உபசரிக்கும் உயர்ந்த பண்பை ஒட்டியே, தீபாவளி நாளில் அனைவருக்கும் இனிப்பு வழங்குகின்றனர்.

அதுபோல் கிருஷ்ண பகவான் நரகாசுரன் என்ற அசுரனை அழித்த தினமே தீபாவளி என்ற புராண வரலாறும்



நமக்கு நுட்பமான கருத்தை உணர்த்துகிறது.

நர-மனிதன், க-கீழ்த்தரமான நிலை.

மனிதனின் கீழ்த்தரமான தாழ்ந்த நிலையைப் பரமாத்மா அழிக்கிறார். நரகாசுரன் வாழ்ந்த நகரம் 'ப்ராக் ஜோதிஷபுரம்' எனப்படுகிறது. 'ப்ராக்' என்பது ஒளி வருவதற்கு முன்பு உள்ள இருண்ட நிலையை அதாவது அறியாமையைக் குறிக்கும்.

மனிதனிடம் இருண்ட பகுதியில் உள்ள கீழ்த்தரமான மனநிலையை, அசுர எண்ணங்களைப் பரமாத்மா அழித்து அங்கு ஞான ஒளியை உண்டாக்குகிறார் என்பது 'நரகாசுர வதம்' என்பதன் பொருளாகும்.

கடவுள் தன்னை நிரூபிக்க ஒருநாளும் அற்புதங்கள் காட்டுவதில்லை. அவருடைய சாதாரண சிருஷ்டிகளே போதும். —பேக்கன்

சம்சாரத்திற்குக் காரணமாகவும், சம்சாரத்தை அழிப்பவனாகவும், சம்சார உருவினனாகவும், சம்சாரத்தினால் தீண்டப்படாதவனாகவும் இருக்கிற சிவபெருமானுக்கு வணக்கம். —சிவஸ்தோத்ராவளி

# ஒரு குடிகாரனின் மனமாற்றம்

-பிரம்மசாரி ராஜு

பிரம்ம சமாஜத்தைச் சேர்ந்த ஒரு குடும்பத்தினர் ஸ்ரீராமகிருஷ்ணரை ஒரு சமயம் கல்கத்தாவிற்கு அழைத்திருந் தார்கள்.

அதற்கிணங்க ஸ்ரீராமகிருஷ்ணர் தமது சீடர் பாபுராமுடனும் லாட்டுவு டனும் கல்கத்தாவிற்குப் புறப்பட்டார். அவர்கள் புறப்படும் தருணத்தில் கிரீஷ் சந்திர கோஷ் அங்கே வந்து சேர்ந்தார்.

கிரீஷ்சந்திர கோஷ் எங்கே போனாலும் கூடவே குடிப்பதற்கு இரண்டு மதுப் புட்டிகளையும் எடுத்துச் செல்வார். மதுவின் துணையின்றி எங்கும் சென்றறி யாதவர் அன்றைய தினமும் இரண்டு மதுப் புட்டிகளுடன் ஸ்ரீராமகிருஷ்ண ரிடம் வந்திருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் தம்முடன் வரும் படி கிரீஷ்சந்திர கோஷையும் அழைத் திருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர், பாபுராம், லாட்டு, கிரீஷ் ஆகியோர் ஒரு வண்டியில் கல்கத்தாவிற்குப் புறப்பட்டனர்.

வண்டி கல்கத்தாவைச் சென்றடைந்த போது ஒரு விநோதச் சம்பவம் நடை பெற்றது.

வண்டியிலிருந்து ஸ்ரீராமகிருஷ்ணர் இறங்கியபோது, எப்படியோ கிரீஷ் கொண்டு வந்த இரண்டு மதுப் புட்டி



களும் கீழே விழுந்து உடைந்துவிட்டன. சாராய நெடி காற்றில் கலந்து எங்கும் பரவியது. அது காரணமாக ஸ்ரீராம கிருஷ்ணரை வரவேற்க வந்த பிரம்ம சமாஜ பக்தர்கள் திகைத்து நின்றனர். 'ஓ! ஸ்ரீராமகிருஷ்ணரும் குடிப்பழக்கம் உடையவர்தானே!' என்று அவர்கள் நினைத்தது அவர்களின் முகபாவத்தி லிருந்து தெளிவாகத் தெரிந்தது. இந்தக் குடிகாரனையா (ஸ்ரீராமகிருஷ்ணரை) ஆன்மிக விஷயங்கள் பேசப்படும் பிரம்ம சமாஜத்தைச் சேர்ந்த இடத்திற்கு அழைப்பது!-இதுவே அங்கிருந்த பிரம்ம சமாஜ அன்பர்களின் பிரச்னையாக ஆயிற்று.

ஒரு கணம்தான்; அவர்கள் அவ்விதம் நினைத்த மறுவிநாடியே ஸ்ரீராம கிருஷ்ணர், "இதோ, இதோ பாருங்கள், இது சாதாரண மருந்துதான்!" என்று தெளிவாகக் கூறினர்.

ஆம்! அவர் அவ்விதம் சொன்ன அதே நேரத்தில் அந்த அதிசயம் நிகழ்ந்தே விட்டது. மதுப் புட்டி உடைந்து தரையில் சாராயம் பரவியிருந்த இடங் களில் கசப்பு மருந்து ஒன்று கொட்டிக் கிடந்தது! நெடிகூட அந்த மருந்தின் நெடிதான்! இவை எல்லாவற்றுக்கும் மேலாக அந்தப் புட்டியின் மேலே ஒட்டியிருந்த லேபிள்கூட 'குப்தா பார்மஸி' என்று மாறிவிட்டது! எல்லோரும் திகைத்து நின்றனர்.

கிரீஷுக்கோ ஒரே ஏமாற்றம். இரண்டு புட்டிச் சாராயம் வீணாகிவிட்டதே என்பதே அவரது கவலை.

கிரீஷ் தமது வீட்டுக்குத் திரும்பி ஒரு நாடகம் எழுதுவதற்கு உட்கார்ந்தார். மது இல்லாமல் அவருக்குத்தான் எந்த எழுத்து வேலையும் ஓடாதே!

எனவே அவர் குடிப்பதற்காக எழுந்து மதுப் புட்டிகள் வரிசை வரிசை யாக அடுக்கியிருந்த அலமாரியைத் திறந்தார். திறந்தவர் அப்படியே சிலை போலத், திகைத்து நின்றுவிட்டார். அங்கு இருந்த எல்லாப் புட்டிகளிலும் 'குப்தா பார்மஸி' என்ற லேபிள்களே ஒட்டப்பட்டிருந்தன.



**கிரீஷ்சந்திர கோஷ்**

கிரீஷ் அங்கிருந்த மதுப் புட்டிகளில் ஒன்றை எடுத்து உடைத்துப் பார்த்தார். உள்ளே இருப்பது அந்தக் கசப்பு மருந்து தான் என்பது கிரீஷுக்குச் சந்தேகத் திற்கு இடமின்றி உறுதியாயிற்று.

ஸ்ரீராமகிருஷ்ணர் ஒருபோதும் கிரீ ஷிடம் குடிப்பழக்கத்தை விட்டுவிடும் படிச் சொன்னதில்லை. கிரீஷை அவரது வழியிலேயே குருதேவர் செல்லவிட் டிருந்தார்.

மேற் கூறிய நிகழ்ச்சியின் மூலம், 'ஸ்ரீராமகிருஷ்ணரே இந்த நாடகத்தின் மூலம் எனக்கு அறிவுரை புகட்டி யுள்ளார். அவரே என்னை வழி நடத்து பவர்' என்று உணர்ந்த கிரீஷ் உள்ளம் நெகிழ்ந்தார். அன்றையிலிருந்து அவர் குடிப் பழக்கத்தை அறவே விட்டு விட்டார்.

மேற்கூறிய நிகழ்ச்சியை, சுவாமி பிரேமானந்தர் சொல்லக் கேட்டு, சுவாமி பிரபவானந்தர் ஆங்கிலத்தில் எழுதியுள்ளார்.



அருள்நெறிக் கதை:

# தானம் செய்யும் வழி



மைதிலி வேணுகோபால்

தர்மபுத்திரர் ராஜசூய யாகம் செய்தார். கிருஷ்ணனின் மேற்பார்வையில் அது மிகவும் கோலாகமாக நடந்தது. கிருஷ்ணன் எல்லோருக்கும் ஆளுக்கு ஒரு வேலை கொடுத்தான். அதன்படி பீமனுக்கு, உணவுக் கூடத்தில் அடியார்களை உபசரிக்க வேண்டிய வேலை.

பீமன் அடியார்களுக்குத் தானே முன் நின்று பரிமாறினான். காய்கறிகள், பட்சணங்கள், பழங்கள், உணவு வகைகள் எல்லாவற்றையும் அவர்களுக்கு அள்ளி அள்ளிப் போட்டான். அதனால் முதலில் ருசித்துச் சாப்பிட்டவர்கள் பின்பு சாப்பிடத் திண்டாடினார்கள். ஆனால் பீமனோ உணவு வகைகளை அள்ளிக் கொட்டிக் கொண்டே யிருந்தான். சாப்பிடும்படி அவர்களை வற்புறுத்தினான். பிறகு அவர்களைப் பலவாறாகத் திட்டினான். மேற்கொண்டு சாப்பிட மறுத்தவர்களைத் தன் கதையைக் காட்டிப் பயமுறுத்தினான்.

அதனால் அடியார்கள் சாப்பிட வருவதை நிறுத்தினார்கள். பீமன் கண்ணுக்குப் படாமல் ஒடி ஒளிந்தார்கள்.

ஒரு நாள் கண்ணன் பீமனை அடியார்களைப்பற்றி விசாரித்தான்: ''கிருஷ்ணா! என்ன காரணமோ தெரியவில்லை. இப்போதெல்லாம் இருபது முப்பது பேர்களே சாப்பிட வருகின்றனர்'' என்றான் பீமன்.

ஒரு கணம் யோசனையில் ஆழ்ந்த கண்ணன், ''பீமா! நான் போஜன சாலையைக் கவனித்துக் கொள்கிறேன். நீ கந்தமாதன மலைக்குச் சென்று, கந்தமாதன முனிவரைக் கண்டு வணங்கி விட்டு வா'' என்றான். அதன்படியே பீமனும் சென்றான்.

கிருஷ்ணன் யாகசாலைக்குள் நுழைந்தான். அங்கே சாப்பிட அடியார்கள் யாரையும் காணவில்லை. உடனே அவன் அவர்களைத் தேடிப் போனான்.

''என்ன இது! உங்கள் யாருக்கும் பசிக்கவில்லையா? ஏன் இன்னும் சாப்பிட வரவில்லை?'' என்று கேட்டான்.

ஆனால் அவர்கள் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக்கொண்டு நின்றனரே தவிர, யாரும் பதில் சொல்லவில்லை.

கடைசியில் ஒருவர், ''பீமன் உணவுப் பண்டங்களை முறம் முறமாகத் தள்ளுகிறான். அவற்றைச் சாப்பிட்டுத்தான் ஆகவேண்டுமென்று பயமுறுத்துகிறான். கன்னா பின்னாவென்று திட்டுகிறான்'' என்று சொன்னார். கிருஷ்ணன் அவர்களைச் சமாதானப்படுத்திச் சாப்பிட அழைத்துச் சென்றான்.

இதற்கிடையில் பீமன் கந்தமாதன மலையை அடைந்தான். அங்கே பொன் மேனியோடு விளங்கிய கந்தமாதன



முனிவர் ஜபம் செய்துகொண்டிருந்தார். பீமன் அவரை வணங்கினுன்.

''பீமா! இப்படிச் சற்று அருகில் வா'' என்ருர் முனிவர். ஆனுல் அவர் வாயிலிருந்து வந்த ஒரு துர்வாடை பீமனை நெருங்கவிடாமல் அடித்தது.

அதைக் கண்டு முனிவர், ''பீமா! உன் தயக்கத்திற்குக் காரணம் புரிகிறது. முற்பிறவியில் நான் அளவில்லாத தான தர்மங்கள் செய்தேன். அதன் பயனுகத் தான் எனக்கு இந்த ஜன்மத்தில் இந்த அழகான பொன்னிற மேனி அமைந்துள்ளது. ஆனுல், வந்த யாசகர்களைக் கடுமையாகத் திட்டியும் தூஷித்தும் தானம் செய்ததனுல் என் வாயில் துர்நாற்றம் வீசுகிறது'' என்று விசனத்தோடு சொன்னுர்.

பீமனுக்கு வயிற்றில் புளியைக் கரைத்தது. ''இந்த முனிவரைப் போலத் தானே நானும் அடியார்களைக் கன்னுபின்னுவென்று திட்டி உணவு கொடுத்தேன்? சாப்பிட வந்தவர்களை இன்னும் உண்ணும்படி கதையைக் காட்டிப் பயமுறுத்தினேனே. எனக்கு என்ன தண்டனை கிடைக்குமோ!'' என்று கலங்கினுன்.

அப்பொழுது முனிவர், ''பீமா! கிருஷ்ணன் அனுப்பிய உன்னைக் கண்டதும் என் சாபம் நீங்கியது. என் வாயில் இதுவரை இருந்து வந்த துர்நாற்றம் நீங்கிவிட்டது'' என்று சொன்னுர்.

பீமன் ஊர் திரும்பிக் கண்ணன் காலில் விழுந்தான். ''எனக்குப் புத்தி வந்தது. என்னை மன்னித்துவிடு'' என்று கதறினுன்.

''அன்னதானமோ, வேறு எந்தத் தானமோ செய்வது பெரிதல்ல. இனிமையாகப் பேசி, தானம் கொடுக்க வேண்டும். அது மிகவும் முக்கியம்'' என்ருன் கிருஷ்ணன்.

# சிவநெறி



— திருமுருக
கிருபானந்த
வாரியார்

கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியும், மற்றவர் அறியா மாணிக்கமலையும் ஆகிய இறைவன் சொருபநிலையில் 'சிவம்' என்றும், உலகை நோக்கிய தடத்த நிலையில் 'பதி' என்றும் பேர் பெறுகிறான்.

இறைவனைப்பற்றியும், உயிர்களின் தன்மைபற்றியும் உயிரின் இயற்கைக் குற்றமாகிய ஆணவத்தைப் பற்றியும் நமது சைவ சித்தாந்த நூல்கள்தாம் தெளிவாகக் கூறுகின்றன. ஏனைய நூல்களில் ஆணவத்தின் பேர்தானும் கூறுமாறில்லை.

**அத்வைதம்**—அத்வைதம் என்று சொல்லுக்குப் பலர் பலவாறு பொருள் கண்டார்கள். திருவருள் துணை செய்யாமையால் மற்ற மதாசிரியர்கள் மாறுபட்ட கருத்துக்களைக் கூறிக் குழப்பம் செய்தார்கள்.

'ஏகம் ஏவ அத்விதீயம் ப்ரஹ்ம' என்பது வேதவாக்கு. இதன் பொருள்—'ஒன்றேதான் பொருள்; இரண்டாவது இல்லை' என்பது. இதை வைத்துக் கொண்டு சங்கரர் முதலியோர், பிரம்மத்தையன்றி வேறு பொருள் இல்லை என்று முடிவு கட்டிவிட்டார்கள்.

பிரம்மத்தைத் தவிர வேறு பொருளே இல்லையானால் இதனை யார் யாருக்குக் கூறுவது? இந்த வார்த்தையினால், சொல்பவன் ஒருவன், கேட்பவன் ஒருவன் இருக்க வேண்டும் அன்றோ? பிரம்மமே மயங்குகிறதா? பிரம்மத்தைத் தவிர வேறு பொருள் இருந்தால்தானே இந்த வசனம் உண்டாகும்?

பிரம்மத்தைத் தவிரத் தலைமைப் பொருள் வேறு இல்லை என்பதே இந்த வேதவசனத்தின் உட்பொருள் என உணர்க. இங்ஙனம் அறியாது மயங்கி மருண்டார்கள் பலர்.

ந—த்வைதம் என்ற சொற்கள் சேர்ந்து அத்வைதம் என்று ஆயிற்று. ந என்ற சொல்லுக்கு, சப்தகல்பத்ருமம் என்ற நூல், ஆறு பொருள் கூறியுள்ளது. அவற்றுள் மூன்று அன்மை, இன்மை, மறுதலை என்பனவாம். இன்மை என்ற பொருளில் அப்பிரகாசம் எனக் கொண்டு ஒன்றேதான் என்றார் சங்கரர். மறுதலைப் பொருளில் அநீதி, அதர்மம் எனக் கொண்டு, இரு பொருள்கள் என்றார் மத்வர். மெய்கண்டார் அப்பிராம்மணன்—பிராம்மண தருமம் கெட்டவன் என்று அன்மைப் பொருளில் கூறியருளினார். 'பொன்னும் அணியும் போல் உலகமும் இறைவனும் ஒன்றே' என அபேதவாதம் கூறினார் சங்கரர். இதில் ஆபரணத்திற்கு வரும் குறைபாடுகள் யாவும் பொன்னுக்கு வரும். ஆதலால் இது பொருந்தாதென உணர்க.

'இறைவனும் உலகமும் ஒளியும் இருளும் போல் வேறு வேறே' என்றனர்





மத்வர். இது பேதவாதம். இருளும் ஒளியும் பகைப் பொருள் ஆதலால், உலகமும் இறைவனும் தொடர்பில்லாமற் போவதனல் இது பொருந்தாமை அறிக.

9 – பாஞ்சராத்திரிகள், இராமானுஜர் 'சொல்லும் பொருளும் போல் பேதாபேதம்' என்பர். சொல்லும் பொருளும் வேறு பொருளேயாதலால், இவர் கூற்றும் பொருந்துமாறில்லை.

10 – சிவாத்துவித சைவர்களும், 'மரமும் கிளேயும் போல' என்று பேதாபேதமே கூறி மயங்குவர். அபேதவாதம், பேதவாதம், பேதாபேதவாதம் என்ற மூன்றுமே பொருந்தா என்ருல், உலகத்துக்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்புதான் எவ்வகைப்பட்டது?

11 – மேலே கூறிய மூன்றனுள் ஒன்றையே கூருது, 'மூன்று தன்மைகளும் தன்னுள் காணப்படும் அத்வைதத் தொடர்பே உலகிற்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பு' என்கிருர் மெய்கண்டசிவம்.

12 – எண்ணும் பொருளில் அகரம் அன்மைப் பொருளிலேயே வரும். அ+ ஏகம் அநேகம் என்பது போல, அ+ த்வைதம் அத்வைதம் என வந்தது.

13 – அத்வைதம் என்பது இரண்டல்லாமை, பிரிவின்மை என உணர்க. பிரிவின்மை என்றதனல் பொருள் இரண்டுதான். இரண்டாயினும் வேறுவேருய் நில்லாது ஒன்றியே நிற்கும்.

14 – இறைவனும் உலகமும் ஒன்றி நிற்கும் கலப்பினல் ஒன்ருகியும், பொருள் தன்மையால் வேருகியும், உலகத்துக்கு உதவும்பொருட்டு உடனுகியும் இறைவன் ஒன்ருகி வேருகி உடனுகி நிற்கிருன்.

15 – இந்த விரிந்த கருத்துக்களே மெய்கண்டார் சுருங்கிய சொற்களால்,

மனைவி, மக்கள், சுற்றம் என்ற மாயவலையைக் கடக்க அறியாமல் ஆன்மா துன்புறுகிறது.

—மாணிக்கவாசகர்

நற்செயல்களில் ஈடுபடுபவனுக்கு உலகம் முழுவதும் சுகம் நிரம்பியுள்ளது. கடல் விரும்பாவிட்டாலும் நதிகளெல்லாம் கடலில் விழுகின்றன. அது போல் அறவழியில் நடப்பவரிடம் சுகமும் செல்வமும் அழைக்காமலே வந்தடைகின்றன.

—துளசி ராமாயணம்

'அவையே தானேயாய்' என்று கூறியுணர்த்துகிருர். அவையேயாய்—உயிரும் உடலும் போல் ஒன்ருகியும், தானேயாய்—பொருள் தன்மையால் கண்ணொளியும் கதிரொளியும் போல் வேருகியும், அவையே தானேயாய்—கண்ணொளியும் ஆன்ம அறிவும் போல் உடனுகியும் நின்று இறைவன் அருள் புரிகிருன்.

16– எனவே, உயிர்களை உய்விக்கும் பொருட்டு இறைவன் ஒன்ருய் வேருய் உடனுய் நிற்கிருன்.

17– இறைவனுடைய அருட்பெருங் கருணையை நினைந்து நினைந்து நாம் உருகி வழிபாடு செய்தல் வேண்டும். இல்லையேல் நன்றி மறந்த பாவத்துக்கு ஆளாவோம்.

18– இறைவனுடைய திருஐந்தெழுத்தை இடையருது ஓதினுல் பிறவிப் பெருங் கடலை எளிதில் கடந்துவிடலாம்.

19– சித்தத்தில் தித்திக்கும் மந்திரம் பஞ்சாட்சரம். சித்திக்கும் முத்திக்கும் அதுவே காரணம். சிவபஞ்சாட்சரத்தை அன்புடன் ஓதும் உத்தமர்க்குத் தரித்திரம் உண்டாகாது. இம்மை மறுமை வீடு என்று மும்மை நலங்களும் உண்டாம்.

20– ''நரகமாகிய கடலைத் தாண்டச் செய்கிறவன் சிவன். தரித்திரமாகிய துக்கத்தைத் தகனம் செய்கிறவன்'' என்று வசிஷ்ட முனிவர் சிவபெருமானைத் துதி செய்கின்ருர்.

21– ''ஆயிரம் எழுத்தல்ல, பத்து எழுத்தல்ல, ஐந்து எழுத்துத்தானே? இதைக் கூட உச்சரிக்கக்கூடாதா?'' என்கிருர் இராமலிங்க அடிகளார்.

22–நமக்கு இறைவன் தந்த வாழ்நாள் சிறிது. ஒவ்வொரு நாளாகக் கழிந்து கொண்டே போகிறது. நாம் அன்ருடம் தேதித்தாள் கிழிக்கிருேமே? தாளா அது? இல்லை. நம் வாழ்நாள். பொழுது விடிந்து பொழுது போனுல் வாழ்நாளில் ஒரு நாள் வீணுகிவிட்டது. ஒரு நாளைக்குத் தேதித்தாளை நாம் கிழிக்க மாட்டோம். மனைவி, ''தினம் காலண்டரைக் கிழித்துப் பற்பொடி மடிப்பீரே; இன்று கிழிக்கவில்லையே?'' என்று கூறி அழுவாள்.

23–ஆறு நாளில் கண்ணப்பர் முத்தி பெற்ருர் என்று அறிகிருேம். நாமும் அதிதீவிரமாக இறைவனிடத்தில் அன்பு செலுத்தினுல் கண்ணப்பர் பெற்ற பேற்றை நாமும் பெறலாம்.

24–திருச்சிராப்பள்ளிக்கு அருகில் யானை பூசித்த தலம் திருவானைக்காவும், எறும்பு பூசித்த தலம் திருஎறும்பூரும் காட்சி





பிறந்த நாம் இறைவனை வழிபட வேண்டாமா?

25- இப் பிறவி தப்பினால் எப் பிறவி வாய்க்குமோ? ஆதலால் ஒவ்வொருவரும் சிவபூசை செய்தல் வேண்டும். திருமுறைகளை ஓதுதல் வேண்டும். திருவெண்ணீறணிந்து, கண்டிகை புனைந்து, ஆலய வழிபாடு செய்தல் வேண்டும். இறைவனிடத்தில் இடையறாத அன்பு செய்ய வேண்டும். மால் என்றால் அன்பு. மால் ஆனார்க்கு அவன் எளியவன். அன்பு செய்வார் நெஞ்சில் நீங்காது நிற்பன்.

26- எனவே, என்பும் உருக அன்பு செய்து, எல்லோரும் பாசநீக்கம் பெற்று, சிவமாம் பெற்றி பெறல் வேண்டும்.

27- இதுகாறும் கூறியவற்றால், இறைவன் எங்கும் உளன் என்பதும், முருகனும் கணபதியும் சிவனது அத்வைத நிலையைக் காட்டினார்கள் என்பதும், இறைவன் உலகமெங்கும் உறையினும் கடல்மீன் போல் உலகமாயை ஒட்டாதவன் என்பதும், தியானத்தால் அவனைக் காணலாம் என்பதும், அத்வைதம் என்ற சொல்லின் உண்மைப் பொருள் இது என்பதும், இறைவன் ஒன்றாய் வேறாய் உடனாய் நின்று தண்ணருள் புரிகிறான் என்பதும், பரமனை வழிபட்டு ஒவ்வொருவரும் உய்தல் வேண்டும் என்றும் சிந்திப்போமாக.



தருகின்றன. பெரிய பிராணி யானை; சிறிய பிராணி எறும்பு. 'எறும்பு முதல் யானை ஈறாக' என்பார்கள். யானையும் இறைவனை வழிபட்டது. எறும்பும் இறைவனை வழிபட்டது. மனிதராகப்



## தீபாவளி வாழ்த்துக்கள்....

வாசகர்களாகிய பேரன்பிற்குரிய ஆன்மிக சகோதர சகோதரிகள், அனைவருக்கும் 'விஜயம்' தனது ஆழ்ந்த அன்பையும், தீபாவளி வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்கிறது.

-ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

சிறுவர் பகுதி

# யார் பெரியவர்?

- பாலோடி

ஒரு சமயம் சரஸ்வதி நதிக்கரையில் எல்லா முனிவர்களும் ஒன்றுகூடினர். பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய மூவரில் யார் பெரியவர் என்பது குறித்து விவாதம் நடந்தது. முனிவர்கள் ஒரு முடிவுக்கு வர முடியவில்லை.

ஆகவே கடைசியில் அவர்கள் பிருகு முனிவரை அணுகி, "இந்த விஷயமாகத் தாங்கள்தாம் ஆராய்ந்து முடிவு செய்ய வேண்டும். இந்தக் காரியத்திற்கு நாங்கள் உங்களைத்தான் ஒருமனதாகத் தேர்ந்தெடுத்திருக்கிறோம்" என்று சொன்னார்கள். சரி என்று பிருகு இசைந்தார்.

பிருகு பிரம்மாவின் மானச புத்திரர்களில் ஒருவர். ஆகவே அவர் நேராகப் பிரம்மலோகம் சென்றார். அங்கே அவர் தம் தந்தையான பிரம்மாவை நமஸ்கரிக்கவும் இல்லை; அவரைக் குறித்துத் துதி சொல்லவும் இல்லை. இதனால் பிரம்மா மிகவும் கோபமடைந்தார். ஆனால் தம் மகனாயிற்றே என்று மன்னித்து அனுப்பினார்.

பிருகு அடுத்தபடியாகச் சிவலோகம் வந்தார். பிருகு வந்ததும் அவரைக் கட்டிக்கொள்ளச் சிவன் ஓடி வந்தார்.

ஆனால் பிருகு அவரைப் பார்த்து, "நீ ஒரு பைத்தியக்காரன். என்னைத் தொடாதே" என்றார்.

இதைக் கேட்டதும் சிவனுக்குக் கோபம் வந்தது. தம் திரிசூலத்தினால் அவர் பிருகுவைக் குத்தப் போனார். இதைக் கண்ட பார்வதி சிவன் காலில் விழுந்து பிருகுவை மன்னிக்கும்படி கேட்டுக்கொண்டாள். சிவனின் கோபமும் தணிந்தது.

கடைசியில் பிருகு வைகுண்டம் வந்து சேர்ந்தார். அப்போது விஷ்ணு மகாலட்சுமியின் மடியில் தலையை வைத்துக்கொண்டு படுத்திருந்தார். அதைக் கண்டதும் பிருகு தம் காலால் விஷ்ணுவின் மார்பில் உதைத்தார்.

உதைபட்ட விஷ்ணு உடனே விழித்தெழுந்தார். உடனே பிருகுவின் காலில் விழுந்து, அவர் பாதகமலங்களைத் தம் மலர்க்கரங்களால் வருட ஆரம்பித்தார்.

"சுவாமி! என் மார்பு மிகவும் கடினமானது. தங்கள் பாதங்களோ மிகவும் மென்மையானவை. தங்கள் காலில் ஒன்றும் அடிபடவில்லையே!" என்று விஷ்ணு மிகவும் பணிவுடன் பிருகு முனிவரிடம் கேட்டார்.



இதைக் கேட்டதும் பிருகுவின் மனம் மாறியது. "ஆகா! தாங்கள் விரும்பியிருந்தால் எனக்கு என்ன தண்டனை வேண்டுமானாலும் கொடுத்திருக்கலாம். அதை விடுத்து இப்படி என்னை மன்னித்தீர் களே!" என்றார்.

பிருகு பூலோகம் திரும்பி, மற்ற முனிவர்களிடம் நடந்த விஷயங் களைச் சொன்னார். "எவன் எதிரியிடமும் அன்பு காட்டுகிறானே அவன் தான் பெரியவன்; ஆகவே விஷ்ணுவே பெரியவர்" என்கிற முடிவுக்கு அவர்கள் வந்தார்கள்.

பகைவனிடத்திலும் அன்பு வேண்டும் என்ற கருத்தை இந்தக் கதையின் மூலம் அறிகிறோம்.

---

தங்களுக்குக் கிடைக்கும் பொருளை எவர்கள் ஐந்து பாகங்களாகப் பிரித்து, முதல் பாகத்தைத் தர்ம காரியங் களுக்கும், இரண்டாவது பாகத்தைத் தங்கள் கீர்த்திக் காகவும், மூன்றாவது பாகத்தைப் பொருளை விருத்தி செய் வதற்காகவும், நான்காவது பாகத்தைத் தங்கள் செலவுக் காகவும், ஐந்தாவது பாகத்தைத் தங்கள் உற்றார் உறவின ருக்காகவும் செலவழிக்கிறார்களோ, அவர்கள் இகத்திலும் சரி, பரத்திலும் சரி, இன்பத்தை அனுபவிக்கிறார்கள்.

சுகர்



# வள்ளலார் வாக்கு



## இறை இன்பம்

கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும் வகை கிடைத்த
குளிர்தருவே தருநிழலே நிழல் கனிந்த கனியே
ஓடையிலே ஊறுகின்ற தீஞ்சுவைத் தண்ணீரே
உகந்த தண்ணீர் இடைமலர்ந்த சுகந்த மணமலரே
மேடையிலே வீசுகின்ற மெல்லிய பூங்காற்றே
மென்காற்றில் விளைசுகமே சுகத்தில் உறும் பயனே
ஆடையிலே எனை மணந்த மணவாளா பொதுவில்
ஆடுகின்ற அரசே என் அலங்கல் அணிந்தருளே.

## சிவம் எல்லார்க்கும் பொது

கல்லார்க்கும் கற்றவர்க்கும் களிப்பருளும் களிப்பே
காணார்க்கும் கண்டவர்க்கும் கண்ணளிக்கும் கண்ணே
வல்லார்க்கும் மாட்டார்க்கும் வரம் அளிக்கும் வரமே
மதியார்க்கும் மதிப்பவர்க்கும் மதி கொடுக்கும் மதியே
நல்லார்க்கும் பொல்லார்க்கும் நடுநின்ற நடுவே
நரர்களுக்கும் சுரர்களுக்கும் நலங்கொடுக்கும் நலமே
எல்லார்க்கும் பொதுவில் நடம் இடுகின்ற சிவமே
என் அரசே யான் புகலும் இசையும் அணிந்தருளே.

— இராமலிங்க அடிகன்







# வரகுண பாண்டியர்

— ராஜம் ஜயராமன்

பாண்டிய நாட்டை வரகுண பாண்டியர் என்ற அரசர் ஆட்சி செய்து வந்தார்.

ஒரு நாள் அவர் வேட்டைக்குச் சென்று திரும்பியபோது, அவரது குதிரை, வழியில் படுத்து உறங்கிய அந்தணன் ஒருவனை மிதித்துவிட்டது. அதனால் அந்தணன் உயிர் துறந்தான்.

அந்தணனைக் கொன்ற பாவம் காரணமாக அவருக்குப் பிரம்மஹத்தி தோஷம் உண்டாயிற்று. இந்தப் பாவத்திலிருந்து தம்மை விடுவித்துக்கொள்ளும் பொருட்டு அவர் பல தர்மகாரியங்களைச் செய்தார். எனினும் அந்தப் பிரம்மச் சாயை அவரை விடாமல் பின்தொடர்ந்தது. ஆகவே, மன்னர் என்ன செய்வது என்று புரியாமல் வருந்தினர்.

அப்போது வேதம் உணர்ந்த மறையோர் மன்னரிடம், ''திருவிடைமருதூரில் உள்ள மகாலிங்கசுவாமியைத் தினமும் ஆயிரத்தெட்டு முறை வலம் வந்து, பத்துத் தினங்கள் விரதமிருங்கள். அவ்விதம் நீங்கள் செய்தால் இந்தப் பிரம்மஹத்தி தோஷம் உங்களை விட்டு நீங்கும்'' என்றனர்.

வரகுண பாண்டியர் அவ்விதமே செய்ய நினைத்துத் திருவிடைமருதூருக்குச் சென்றார். அங்கேயே அவர் சில நாட்கள் தங்கிச் சிவ வழிபாட்டில் ஈடுபட்டார்.

வரகுண பாண்டியர் சிவபக்தியில் சிறந்தவர். சிவபெருமானின் பெயரைக் கேட்டாலே நெகிழ்ந்து உருகும் இயல்பு கொண்டவர்.

சூரியன், சந்திரன், உயிர், மண், நீர், அனல், காற்று, ஆகாயம் ஆகியவற்றை அஷ்ட மூர்த்தங்கள் என்று சொல்வார்கள். இந்த அஷ்ட மூர்த்தங்களிலும் இறைவனைக் கண்டு மனம் மொழி மெய்யால் வழிபடும் வரம் பெற்றவர் அந்த அரசர். அது காரணமாகவே அவருக்கு 'வரகுண பாண்டியர்' என்ற பெயர் வழங்கலாயிற்று.

வரகுண பாண்டியர் சிவபெருமான் மீது கொண்டிருந்த பக்திப் பெருக்கும், அவர் திருவிடைமருதூரில் தங்கிச் செய்த திருத்தொண்டும் மிகவும் வியப்பிற்கு உரியன. அவரது சிவபக்தி பல விதங்களில் வெளிப்பட்டுள்ளது.

ஒரு நாள் அரண்மனைக் காவலன், ஒரு திருடனைக் கையில் விலங்கு பூட்டி அரசரின் முன்னிலையில் அழைத்து வந்தான். அரசர் திருடனுடைய முகத்தைக் கவனித்தார். அந்தத் திருடன் திருநீறு அணிந்திருந்தான். அதைக் கண்டவுடனே மன்னரான வரகுண பாண்டியர், ''இவன் சிவபக்தன்; இவனை விட்டுவிடு'' என்று சொல்லி, திருடனது கைவிலங்கை அவிழ்த்துவிட உத்தரவிட்டார்.

எப்போதும் இறைவன் திருநாமத்தையே ஜபித்துக் கொண்டிருக்கும் வழக்கம் கொண்டவர் வரகுண பாண்டியர். அவருக்கு இரவு நேரத்தில் வயல் வெளிகளில் நரிகள் ஊளையிடும் சப்தத்தைக் கேட்டதும் அவை 'சம்போ' என்று இறைவனைக் கூவி அழைப்பதாகத் தோன்றியது. எனவே மனம் உருகிய அவர் காவலனை அழைத்து, ''இந்த நரிகள் சிவனுடைய பெயரைக்



கூவி அழைக்கின்றன. ஆதலால் இவற்றுக்குப்பட்டுச்சட்டை தைத்துப்போடு'' என்று உத்தரவிட்டார்.

குளங்களில் தவளைகள் ஓயாமல் கத்திக்கொண்டிருந்தன. இதைக் கேட்ட மன்னர், ''இந்தத் தவளைகள் 'ஹர ஹரா!' என்று இறைவன் நாமத்தையே எப்போதும் பாடிக்கொண்டிருக்கின்றன. ஆகவே இவை வசிக்கும் குளங்களில் காசும் பொன்னும் கலந்து தூவுங்கள்'' என்று கட்டளையிட்டார்.

ஒரு சமயம் ஒருவன் மகாலிங்க சுவாமிக்குத் தைல அபிஷேகம் செய்வதற்காக எள்ளைக் காய வைத்திருந்தான். அதை மற்றொருவன் சிறிது எடுத்து வாயில் போட்டுத் தின்றுவிட்டான்.

உடனே எள்ளிற்குச் சொந்தக்காரன் சிவ கைங்கரியத்துக்கு வைத்திருந்ததை எடுத்ததாகக் கூறி அவனை அழைத்துப் போய் அரசர் முன்னிலையில் நிறுத்தி முறையிட்டான்.

வரகுண பாண்டியர் அந்தத் திருடனை நோக்கி, ''எள்ளை எடுத்துத் தின்றது உண்மைதானா?'' என்று விசாரித்தார்.

திருடன் தனது குற்றத்தை ஒப்புக்கொண்டான்.

மீண்டும் அரசர், ''அந்த எள் சிவபெருமானின் தைல அபிஷேகத்திற்காகக் காய வைத்திருந்தது என்ற விஷயம் உனக்குத் தெரியுமா?'' என்று கேட்டார்.

திருடன், ''ஆம், தெரியும்'' என்று பதில் கூறினான்.

அதைக் கேட்டதும் அரசர் கோபத்துடன், ''அந்த எள் சிவ கைங்கரியத்திற்காகக் காய வைக்கப்பட்டிருந்தது என்று தெரிந்துமா எடுத்துத் தின்றாய்? சிவ அபசாரம் செய்துவிட்ட உன்னை இப்போதே இந்த வாளால் வெட்டிவிடுகிறேன்'' என்று சொல்லி உடனே வாளை உருவினார்.

திருடன், ''அரசே! நான் சொல்வதைத் தயைசெய்து சிறிது கேளுங்கள். எள்ளைத் தின்றால் உழைக்க வேண்டும். மகாலிங்க சுவாமியினுடைய எள்ளைத் தின்றால் மீண்டும் பிறந்து அவருக்குத் தொண்டு

செய்யும் பாக்கியத்தை அடைவேன். அதனுல்தான் அவருடைய எள்ளேத் தின்றேன்'' என்ருன்.

இதைக் கேட்ட அரசர் மிகவும் மகிழ்ச்சியடைந்தார். அத்துடன் அவர், ''இவன் சிவபக்தன். சிவத்தொண்டு செய்வதற்காகவே எள்ளே எடுத்துத் தின்றிருக்கிருன்'' என்று அவனது செயலே எண்ணி வியந்து, திருடனின் வாயைத் திறக்கச் சொல்லி அவனது வாயில் ஒட்டியிருந்த இரண்டொரு எள்ளேத் தாமும் எடுத்துத் தின்ருர்.

ஒரு நாள் வரகுண பாண்டியர் ஒரு பாதை வழியாகச் சென்றுகொண்டிருந்தார். அந்த வழியில் இருந்த வேப்ப மரத்திலிருந்து பழங்கள் கீழே உதிர்ந்து கிடந்தன. அவற்றைக் கண்டதும் அரசருக்கு அவை சிவலிங்கத்தின் பாணத்தைப்போல் தோன்றின. மகிழ்ச்சி பொங்க அருகில் இருந்த காவலர்களிடம், ''சிவபெருமானின் உருவத்தைத் தந்த இந்த வேப்பமரத்திற்கு விதானம் அமையுங்கள்'' என்று உத்தரவிட்டார்.

சிவ சின்னங்களேப் பூண்ட யாராயினும் அவரது பெயரையும் குணத்தையும் குலத்தையும் கருதாமல் அவர்களேச் சிவபெருமானுகவே கருதும் பக்தியினுல் பிறவி வேரைக் களேந்தவர் வரகுண பாண்டியர். அவரது பக்திப் பெருக்கைக் கண்ட இறைவன் அவரது பழியை விலக்கி அவருக்குச் சிவலோகம் காட்டியருளினுர்.

எல்லாவற்றிலும் சிவனேயே கண்டு போற்றிய வரகுண பாண்டியரைப் பற்றிப் பட்டினத்தடிகள் திருவிடை மருதூர் மும்மணிக் கோவையில் சிறப்பித்துக் கூறியுள்ளார்.

# ஆன்மிக வினா-விடை

## — சுவாமி கமலாத்மானந்தர் —







பி. எஸ். பிரகாஷ், மதுரை-1

கேள்வி : ஒருவர் ஒரு வீட்டை விட்டு மற்றொரு வீட்டிற்கு மாற்றும்போதும், வீட்டை வாங்கிய பிறகு அதில் குடிபுகும் போதும் பெண்கள் பால்குடத்தைத் தூக்கிக்கொண்டு செல்கிறார்கள். இது ஏன்? இவ்விதம் செய்ய வேண்டும் என்று சாஸ்திரத்தில் உள்ளதா? இவ்வாறு செய்வதனால் என்ன பலன்?

பதில் : மங்கல வாத்தியம், பூர்ணகும்பம், தீபம், பால்குடம், பசுமாடு, சுமங்கலிப் பெண்—இவை எல்லாம் மங்களத்திற்கு அடையாளம். ஆகையால், புது வீட்டில் புகுவது மங்களமாக இருக்க வேண்டும் என்பதற்காக இவற்றுள் ஒன்றையோ எல்லா வற்றையுமோ வைத்துக்கொண்டு கிருகப்பிரவேசம் செய்கிறோம்.

கவிஞர் தேனி முருகேசன், தேனி

கேள்வி : கோவிலுக்குச் சென்று சுவாமி தரிசனம் முடித்த பிறகு, அங்கேயே சிறிது நேரம் உட்கார்ந்து வர வேண்டும் என்ற நியதி இருக்கிறதா?

பதில் : தெய்வத்திற்கு அர்ச்சனை செய்து கோவி

கே. சுப்புலட்சுமி, பாண்டிச்சேரி-6

கேள்வி: ஆஞ்சநேயருக்குப் பொட்டு வைத்துப் பூஜிப்பதை ஸ்திரீகள் செய்யலாமா?

பதில் : ஆஞ்சநேயர் பிரம்மசாரி ஆனதால் அவரைப் பெண்கள் தொடக் கூடாது, பொட்டு வைத்துப் பூஜிக்கக்கூடாது என்று சிலர் கருதலாம். ஆனால், அவர் தெய்வமாகிவிட்ட நிலையில் அவரை வழிபடுவதில் ஆண் பெண் என்ற வேற்றுமை உணர்ச்சியை விலக்கிவிட வேண்டும். ஆண் பிள்ளைகள் அம்பிகைக்குப் பொட்டிட்டுப் பூஜிக்க வில்லையா ?

சி. அருள், சென்னை-20

கேள்வி: எனது தந்தையார் சிவனை வழிபடுகிறார். தினமும் வில்வம் வைத்து வழிபட வேண்டும் என்று சிலர் கூறிய தற்கு இணங்க அவ்விதமே செய்கிறார். வில்வம் கிடைக் காத நாட்களில் என்ன செய்வது? வில்வம் கிடைக்காத போது அதனால் ஏதாவது கெடுதல் நிகழுமா?

பதில் : வில்வம் கிடைக்கும்போது அதை உலர்த்தி வைத்துக்கொண்டு உலர்ந்த இதழ்களை வில்வம் கிடைக்காத நாட்களில் உபயோகிக்கலாம்.

லில் நம்முடைய வேண்டுதலைச் செய்தபின் அமைதி யாகச் சிறிது நேரம் உட்கார்ந்து இருந்தால் தெய்வம் நமக்குக் கூறுவது என்ன என்று விளங்கும்.

நாம் துதித்தால் மட்டும் போதாது. தெய்வத்தின் பதிலுக்கும் அமைதியாகச் செவி சாய்க்க வேண்டும் என்பது இந்த வழக்கத்தின் நோக்கம்.

ஸ்ரீராமகிருஷ்ணர் தீர்த்த யாத்திரையைப்பற்றித் தெரிவித்த ஒரு கருத்து, தங்கள் கேள்விக்கும் ஓரளவு பொருந்துவதாக இருக்கிறது. ஸ்ரீராமகிருஷ்ணரின் அந்த உபதேசம் வருமாறு:—

''வயிறு நிறையப் புல்லைத் தின்ற பசு ஓர் இடத்தில் அமைதியாகப் படுத்துக்கொண்டு அசை போடுகிறது. அது போலவே, தீர்த்த யாத்திரைக்கு நீ போய் வந்தால், அந்த அந்தத் தெய்விகத் தலத்தில் உன் மனதில் எழுந்த தூய எண்ணங்களைப் பற்றிச் சிந்தித்துத் தனி இடத்தில் உட்கார்ந்து அவற்றிலேயே ஆழ்ந்து போக வேண்டும். அவ்விதமின்றி அங்கிருந்து வந்ததும், அந்த எண்ணங்கள் உன் மனதை விட்டு அகன்றுபோகும்படி, நீ உலக விவகாரங்களில் தலையிட்டுக்கொள்வது கூடாது.''

**எஸ். ஆர். சிவகாமசுந்தரி, கோவை-26**

**கேள்வி: தஹராகாசம் என்றால் என்ன?**

**பதில்:** சூரிய சந்திர நட்சத்திரங்கள் அடங்கிய ஆகாயம் பேரம்பலம் எனப்படும்.

சிற்றம்பலம் என்பது மனவெளியைக் குறிக்கிறது.

சிதம்பரம் மனதிற்கும் அப்பால் உள்ள இருதய குகை அல்லது தஹராகாசம் எனப்படும். இதுதான் ஆத்மாவின் கோவில்.

'சித்தமறியாதபடி சித்தத்தில் நின்றிலகு திவ்ய தேஜோமயத்தைச் சிற்பர வெளிக்குள் வளர் தற்பர மதான பரதேவதையை அஞ்சலி செய்வாம்' என்று பாடுகிறார் தாயுமானவர்.

வில்வத்தினால் அர்ச்சிப்பதனால் நன்மை. அப்படிச் செய்யாததனால் தீமை ஏதும் விளையாது.

**ரவீந்திரன், திருவாரூர்**

**கேள்வி: பரார்த்த பூஜை, இஷ்டார்த்த பூஜை என்றால் என்ன?**

**பதில்:** பர-அர்த்த-பூஜை என்று பிரித்துக் கொள்வோம். பர-பிறருக்காக; அர்த்த-வேண்டிச் செய்யப்படும் பூஜை. இது கோயில் பூசாரி நமக்காகப் பூஜை, அர்ச்சனை செய்வது போன்றது. அல்லது பர-பரமார்த்த நிலை எய்துவதற்குச் செய்யும் பூஜை என்றும் கொள்ளலாம்.

இஷ்டார்த்த பூஜை என்பது காமிய பூஜை. இது விரும்பிய பயனை அடைவதற்காகச் செய்யப்படும் பூஜையாகும்.

**வி. கணேசன், கோவை-18**

**கேள்வி: ஸ்ரீகாயத்ரீதேவி பஞ்ச முகத்துடன் காட்சி அளிப்பதற்கும், நாம் காயத்ரீ மகாமந்திரத்தைப் பஞ்ச பாகமாகப் பிரித்து ஜபிப்பதற்கும் தொடர்பு ஏதேனும் உண்டா?**

**பதில்:** ஸ்ரீகாயத்ரீதேவி பஞ்ச முகத்துடன் காட்சி அளிக்கிறாள். பத்துக் கைகளிலும் சங்கம், சக்கரம், கதை, தாமரை முதலிய தெய்விக ஆயுதங்களுடனும் 'சின்' முத்திரையுடனும் தரிசனம் கொடுக்கிறாள்.

நாம் காயத்ரீ மகாமந்திரத்தை ஐந்து பாகமாகப் பிரித்து ஜபம் செய்து வரும் முறை சாலச் சிறந்தது என்பது பெரியோர் வாக்கு.

காயத்ரீதேவி ஐந்தொழிலைச் செய்பவள். எனவே அவள் 'பஞ்சக்ருத்யபராயணா' ஆகிறாள். சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம், திரோதானம், அனுக்கிரகம் ஆகிய ஐந்து தொழிலையும் அவள் செய்கிறாள்.

பிரம்ம சக்தியாகச் சிருஷ்டியையும், விஷ்ணு சக்தியாக ஸ்திதியையும், ருத்திர சக்தியாகச் சம்ஹாரத்தையும், ஈச்வர சக்தியாகத் திரோதானத்தையும், சதாசிவ சக்தியாக அனுக்கிரகத்தையும் காயத்ரீதேவி செய்கிறாள்.

எனவேதான் அவளுக்கு ஐந்து முகம். இது காரண மாகவே மந்திரமும் ஐந்து பாகமாக நிறுத்தி ஜபிக்கப்படுகிறது.

**கே. மயில்வாகனன், திருக்கழுக்குன்றம்**

**கேள்வி: கஷ்டத்திலிருந்து விடுபடாமலும், எந்தத் தொழில் செய்தாலும் முன்னேற்றம் இல்லாமலும் வருந்தும் மக்கள், எந்த விதச் சுலோகங்களைச் சொல்லி ஆண்டவனிடம் முறையிட்டால் கஷ்டம் நீங்கித் தொழில் செழிப்புடன் வாழ உதவும்?**

**பதில் :** சுலோகங்களைச் சொல்லித் துதிகளைப் பாடி மனம் கசிந்து முறையிட்டால் இறைவன் நல்ல புத்தியைக் கொடுத்து மேலேற வழி காட்டுவான்.

எந்தத் தெய்வத்தையும் வழிபடலாம். அனுபூதி மான்களாகிய பெரியோர் பாடியுள்ள எந்தத் துதிப் பாடலையும் பாடி வழிபடலாம்.

'பிறரை ஏமாற்றிப் பொருள் சேர்க்கலாம், உழைப்பில்லாமல் உயர்ந்துவிடலாம்' என்ற எண்ணத்தைக் கைவிட வேண்டும்.

''நீங்கள் எப்படி வேண்டுமானாலும் வாழ்ந்திருக் கலாம், வாழலாம். இந்த ஸ்தோத்திரம் ஒன்றை மட்டும் பாராயணம் செய்யுங்கள்; உங்கள் கோரிக்கை நிறைவேறும்; கஷ்டமெல்லாம் தீரும்'' என்று சொல்லி ஏதேனும் ஒரு ஸ்தோத்திரத்தை அல்லது மந்திரத்தைச் சிபாரிசு செய்பவர்கள் இருக்கிறார்கள். ஆனால் அப்படி ஒரு சிபாரிசை ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் செய்யாது. ஏனெனில், அவ்விதம் சிபாரிசு செய்வது ஸ்ரீராமகிருஷ்ண விஜயத்தின் கொள்கைக்கே முரணானது.

நேர்மையான வாழ்க்கை வாழுங்கள். கடவுளை நம்புங்கள். தன்னம்பிக்கையுடன் இருங்கள். உங்கள் உழைப்பில் நம்பிக்கை வையுங்கள்—இதுவே ஸ்ரீராம கிருஷ்ண விஜயத்தின் கருத்து.

**எஸ். ரவிசந்திரன், அசோக்நகர்**

**கேள்வி : கிழக்கு அல்லது வடக்குத் திசையை நோக்கித் தியானம், பூஜை செய்ய வேண்டும் என்று சொல்வது ஏன்? இதற்குச் சாஸ்திரப் பிரமாணம் இருக்கிறதா?**

**பதில் :** இவற்றுக்குச் சாஸ்திரப் பிரமாணங்கள் உண்டு.

பாரதப் போரில் அர்ஜுனனின் தேர் கிழக்கு நோக்கித்தான் இருந்தது. அவனுக்கு வெற்றியும் கிடைத்தது. ரிஷிகள் பலர் வடக்குத் திசையை நோக்கித் தவம் இருந்தனர் என்று படிக்கிறோம்.

இமயமலை வடக்கில் உள்ளது. எண்ணற்ற முனிவர்கள் தவம் இயற்றிய இமயமலை உள்ள திக்கை நோக்கித் தவம் செய்தால் அவர்களது ஆசி கிடைக்கும் என்றும் கொள்ளலாம்.

சூரிய பகவான் நாள்தோறும் கண்கண்ட தெய்வமாகக் கிழக்கில் உதித்து நம்மைத் தட்டி எழுப்பி, நமக்கு எல்லாச் செயல்களுக்கும் ஒளிதந்து வழி காட்டுவதனால் கிழக்குத் திக்கை நோக்கிய வழி பாடு சிறந்தது என்று ஆயிற்று. சாஸ்திரப் பிரமாண மும் இதற்கு உண்டு.

நடுப்பகலில் வடக்கும் தியானத்திற்கு உரியது. மாலையில் மேற்கும் உரியது. தெற்குத் திக்கில் யமலோகம் என்று சாஸ்திரம் கூறியதால், அது சுப காரியங்களுக்கும், தெய்வ வழிபாட்டுக்கும் உரியதாகக் கொள்ளப்படவில்லை. இந்த நடை முறைகளெல்லாம் சாதாரண மக்களுக்குத்தான்; ஞானிகளுக்கு இல்லை.

திக்குப் பற்றிய இந்த நியமம் தெய்வத்திற்கும் இல்லை. மயிலாப்பூரில் கற்பகாம்பாள் தெற்கு நோக்கி இருக்கிறாள். தட்சிணாமூர்த்தி எல்லா இடங்களிலும் தெற்கு நோக்கித்தான் இருக்கிறார். ஸ்ரீராமகிருஷ்ணர் வழிபட்ட பவதாரிணியும் தெற்கு நோக்கியே இருக்கிறாள்.





# மரணத்தை நேசிக்கும் மனநிலை

— பிரம்மசாரி சுந்தரசைதன்யா

1900-இல் பாரிஸ் நகரில் சர்வசமய மாநாடு நடைபெற்றது. அதில் கலந்து கொள்வதற்காக, சுவாமி விவேகானந்தர் சென்றிருந்தார்.

அப்போது நிச்சுலு என்ற இளைஞன் சுவாமிஜியால் மிகவும் கவரப்பட்டான். அவரை அவன் தன் வீட்டிற்கு விருந்தினராக வரும்படிக் கேட்டுகொண்டான். அவனது அழைப்பை ஏற்று, சுவாமிஜி அவன் வீட்டிற்குச் சென்ருர். ஆனுல், ''மூன்று நாள் மட்டும்தான் தங்கியிருப்பேன்'' என்று சுவாமிஜி முன்பே சொல்லிவிட்டார்.

தன் வீட்டில் விருந்தினராகத் தங்கிய சுவாமிஜிக்கு வேண்டிய பணிவிடைகளையெல்லாம் நிச்சுலு மிகவும் ஆர்வத்தோடு செய்தான். அவரை அவன் தெய்வாம்சம் பொருந்தியவர் என்று கருதினுன், சுவாமிஜியின் துணிகளை மடித்து வைப்பது, அவரது காலணிகளைத் துடைப்பது போன்ற பணிகளை மகிழ்ச்சியுடன் தானுகவே முன் வந்து செய்தான்.

சுவாமிஜி கூறிய உயர்ந்த தத்துவங்களை நிச்சுலுவால் புரிந்துகொள்ள முடியவில்லை. ஆனுல் அவன் சுவாமிஜியை உயிருக்கு உயிராக நேசித்தான்.

மூன்று நாள் முடிந்ததும், சுவாமிஜி அவன் வீட்டை விட்டுப் போக வேண்டிய நேரம் வந்தது. அப்பொழுது விவேகானந்தர் நிச்சுலுவைத் தம் அருகில் அன்போடு அழைத்து, ''உலகத்தைத் துறந்து நீயும் என்னுடன் துறவியாக வந்துவிடுகிருயா?'' என்று கேட்டார்.

''அதனுல் எனக்கு என்ன லாபம்?'' என்று கேட்டான் நிச்சுலு. உண்மையில் அவனுக்குத் துறவு வாழ்க்கை என்ருல் என்ன என்பதே தெரியாது.

''மரணத்தை நேசிக்கும் மனநிலையைத் தருவேன்'' என்று சுவாமிஜி கணீரென்று கம்பீரமாகக் கூறினுர்.

சுவாமிஜி கூறியது அவனுக்கு விளங்கவில்லை. எனவே அவன் சுவாமிஜி ஏதோ



விளையாட்டாகப் பேசுகிறார் என்று நினைத்தான்.

''சுவாமிஜி, நான் ஓர் இளைஞன். நீண்ட வாழ்க்கை என் முன்னால் இருக்கிறது. நீங்களோ என்னை மரணத்தை நேசிக்கும்படிச் சொல்கிறீர்களே!'' என்று நிச்சுலு சிரித்துக்கொண்டே கேட்டான்.

அதற்கு சுவாமிஜி, ''நிச்சுலு! நான் உனக்குத் தரப்போகும் துறவு மனநிலை காரணமாக, நீ மரணத்தை ஒரு விளையாட்டாகவே கருதுவாய்'' என்றார்.

நிச்சுலு ஒரு பதிலும் சொல்லவில்லை. 'நான் உடலல்ல, நான் ஆத்மா' என்ற வேதாந்த உணர்வைப் பெற்றவன் மரணத்தை விளையாட்டாகவே கருதுவான் என்று நிச்சுலு அப்பொழுது அறிந்திருக்கவில்லை. சுவாமிஜி அவன் தலையைத் தொட்டு ஆசி கூறிவிட்டு அங்கிருந்து அகன்றார்.

இது நடந்த இரண்டு வருடங்களுக்கெல்லாம் அதாவது 1902-ஜூலை 4-ஆம் நாள் சுவாமி விவேகானந்தர் மகாசமாதி எய்தினார், ஆனால் அந்த விஷயம் நிச்சுலுவுக்குத் தெரியாது.

பல ஆண்டுகள் கடந்தன. நிச்சுலு ராணுவத்தில் சேர்ந்து இரண்டு உலகப் போர்களிலும் பங்கு கொண்டார்.

இரண்டாம் உலக யுத்தத்தின்போது, நாசிப் படைகள் பாரிஸைத் தாக்கிய பொழுது நிச்சுலு பெரும் படைத் தலைவராக இருந்தார்.

ஒரு நாள் மாலை எதிரிகளின் பயங்கரத் தாக்குதல்களினால் நிச்சுலுவின் ஆயிரக்கணக்கான பிரெஞ்சு வீரர்கள் மாண்டனர்.

அன்று இரவே நிச்சுலு தம் ராணுவத்திற்கு ஏற்பட்ட அழிவுகளையும் உயிர்ச் சேதங்களையும் அளவிடும் பொருட்டு, பகைவர் குண்டுமாரியைப் பொழிந்திருந்த இடத்துக்குச் சென்றார்.

அங்கே மயான அமைதி நிலவிக்கொண்டிருந்தது. துண்டிக்கப்பட்ட மனித உடல்கள் எங்கும் சிதறிக் கிடந்தன.

நிச்சுலு கையில் டார்ச் விளக்கின் உதவியுடன் அங்கு இறந்து கிடந்த போர்வீரர்களின் பிணங்களை ஒவ்வொன்றாகப் பார்வையிட்டுக்கொண்டிருந்தார்.

அப்போது திடீரென்று அந்த மயான அமைதியைக் கலைத்துக்கொண்டு ஒரு தெய்வ மனிதனின் குரல் கேட்டது— ''நிச்சுலு! நான் உனக்கு மரணத்தை நேசிக்கும் மனநிலையைத் தருவேன்!''

ஒலி வந்த திசையை நோக்கி நிச்சுலு நிமிர்ந்து பார்த்தார். என்ன ஆச்சரியம்! அங்கே தெய்விக ஒளிப்பிரபை! அதன் நடுவில் அருள் பொழியும் முகத்துடன்

> **பகவான் தம்மைச் சார்ந்த நிச்சய புத்தி உடைய பக்தர்களுக்குச் சொர்க்கத்திலோ பூமியிலோ பாதாளத்திலோ செல்வங்களைக் கொடுக்கமாட்டார். ஏனெனில் அவற்றால் பகை, வருத்தம், கவலை, கொழுப்பு, கஷ்டம், விபத்து, வீண்முயற்சி, பயனற்ற உழைப்பு முதலியன உண்டாகின்றன.**
>
> **—பாகவதம்**

சுவாமி விவேகானந்தர் நின்றுகொண்டிருந்தார்.

''நிச்சுலு! மரணத்தை விளையாட்டாகக் கருதும் மனப்பான்மையை நான் உனக்குத் தரப்போகிறேன்'' என்று சுவாமிஜியின் அந்தத் திருவுருவம் கூறிற்று.

சுவாமிஜியைப் பல வருஷங்களுக்கு முன்பு பார்த்ததிலிருந்து அன்றுவரையில் உள்ள கால இடைவெளியை நிச்சுலு முற்றும் மறந்துவிட்டார். அவர் சில வார்த்தைகள் பேச நினைப்பதற்குள் சுவாமிஜியின் திருவுருவம் மறைந்துவிட்டது.

'போர்மேகங்கள் சூழ்ந்த இந்த இடத்திற்கு, சுவாமிஜி எப்படி வந்தார்?' என்று நிச்சுலு ஆச்சரியப்பட்டார்.

கடவுளிடம் 'இது வேண்டும்' என்று குறிப்பிடாமல் பொதுவாகப் பிரார்த்திப்பதே முறை. நமக்கு நன்மை எது என்பதைக் கடவுள் நன்கு அறிவார்.

—சாக்ரடீஸ்

நெல்லிலுள்ள அரிசிதான் முளைக்கிறது. ஆனால், அதன் உமி நீங்கி விட்டால் அது முளைப்பதில்லை.

எவ்வளவோ பெரும் ஆற்றல் வாய்ந்த திறமைசாலியாக இருந்தாலும், பக்கபலம் இல்லாவிட்டால் அவன் எடுத்துக்கொண்ட எந்தக் காரியமும் நிறைவேறுவதில்லை. —ஔவையார்

அருகில் இருந்த இடங்களில் எல்லாம் அவர் சுவாமிஜியைத் தேடினர். ஆனால் சுவாமிஜியை அவரால் காண முடியவில்லை.

அன்றையிலிருந்து நிச்சுலு சுவாமிஜியைத் தேட ஆரம்பித்தார். சுவாமிஜியைப் பற்றிய எந்தத் தகவலோ அல்லது அவரை எங்கே பார்க்க முடியும் என்ற திடமான நம்பிக்கையோ இல்லாமல் பல ஐரோப்பிய நாடுகளில் நிச்சுலு தேடினர். பாரிஸ், லண்டன், ஜெனிவா போன்ற நகரங்களிலும் தேடினர். எந்த இடத்திலும் அவருக்குச் சுவாமிஜியைப் பற்றிய தகவல் எதுவும் கிடைக்கவில்லை.

பல ஆண்டுகளுக்குப் பிறகு அதாவது 1949-இல் லண்டனிலிருந்து கல்கத்தா செல்லும் கப்பல் ஒன்றில் நிச்சுலு பிரயாணம் செய்துகொண்டிருந்தார். கப்பலில் அவர் ஓர் இந்திய சந்நியாசியைக் கண்டார். ஸ்ரீராமகிருஷ்ண மடத்தைச் சேர்ந்த சுவாமி நிகிலானந்தரே அந்தச் சந்நியாசி. சுவாமி நிகிலானந்தர் ஸ்ரீராமகிருஷ்ண மடத்தைச் சார்ந்தவர் என்ற விஷயம் நிச்சுலுவுக்குத் தெரியாது.

சுவாமி விவேகானந்தரைப் பற்றிய ஏதேனும் தகவலை இந்த இந்தியச் சந்நியாசி தரக்கூடும் என்ற எண்ணத்தில் நிச்சுலு, சுவாமி நிகிலானந்தரை அணுகினர். தம்மிடமிருந்த சுவாமி விவேகானந்தரின் புகைப்படத்தை நிகிலானந்தருக்கு நிச்சுலு எடுத்துக்காட்டி, "உங்களுக்கு சுவாமி விவேகானந்தரைத் தெரியுமா? அவரை நான் எங்கே பார்க்க முடியும்?" என்று கேட்டார். மேலும், தமக்கும் விவேகானந்தருக்கும் பாரிஸில் ஏற்பட்ட தொடர்பைப் பற்றியும், போர்க்களத்தில் தாம் சுவாமி விவேகானந்தரைக் கண்ட நிகழ்ச்சியைப் பற்றியும் சொன்னர்.

இதைக் கேட்ட சுவாமி நிகிலானந்தர், "நிச்சுலு, நீ ஒரு வகையில் பாக்கியசாலி; ஆனல் இன்னொரு வகையில் துர்ப்பாக்கியசாலி" என்ருர்.

"எப்படி?!" என்று வினவினர் நிச்சுலு.

"சுவாமி விவேகானந்தரின் தெய்விகக் காட்சியைக் கண்டதனல் உண்மையிலேயே நீ பாக்கியசாலி. ஆனல் 1902-ஆம் ஆண்டிலேயே அவர் மகாசமாதியடைந்து விட்டார். அந்தத் தெய்விகபுருஷரை நீ மீண்டும் ஊனுடலில் காண முடியாது. அந்த வகையில் நீ துர்ப்பாக்கியசாலி" என்ருர்.

நிச்சுலுவின் கண்களிலிருந்து நீர் பொலபொலவென்று வடிந்தது.

சுவாமிஜியின் புனிதத் தொடர்பின் பயனுகத் தமது எஞ்சிய காலத்தை நிச்சுலு ஆன்மிகச் சாதனையில் கழித்தார்.

## - செய்திகள் -

* சிந்தாதிரிப்பேட்டை, திருஞானசம்பந்தர் அருள்நெறி மன்றத்தில் செப்டம்பர் 30-ஆம் நாள் சுவாமி தன்மயானந்தரின் ஆன்மிகச் சொற்பொழிவு நடைபெற்றது.

* பெரம்பூர், அன்னதான சமாஜம் சுவாமி விவேகானந்தர் ஹாலில் செப்டம்பர் 25-ஆம் தேதி ஸ்ரீராமகிருஷ்ண ஜயந்தி விழா கொண்டாடப்பெற்றது. சுவாமி தன்மயானந்தர், பிரம்மசாரி சுந்தரசைதன்யா ஆகியோர் உரையாற்றினர். பிரம்மசாரி பாஸ்வரசைதன்யா விசேஷ பூஜைகள் நடத்தினர்.

# தேவி பாகவதம் சொல்லுகிறது

-திரட்டும் தமிழும்: அண்ணு சுப்ரமண்யம்

1. வீடு பந்தப்படுத்தும் இடமன்று: பந்தத்திற்கு அது காரணமும் ஆகாது. மனதில் எவன் பற்று நீங்கியவனே அவன் இல்லறத்தானுயினும் முக்தி எய்துவான்.

2. எல்லாத் தீர்த்தங்களேயும் சுற்றி வந்து திரும்பத் திரும்ப நீராடினுலும் எது வரையில் மனம் மாசற்றதாக வில்லேயோ அது வரையில் எல்லாம் வீணே.

3. எது கட்டுப்படுத்தாதோ அதுவே கர்மம் என்று சொல்லத்தக்கது. எது முக்திக்குச் சாதனமோ அதுவே வித்யை ஆகும்.



4. 'இந்த உடல் என்னுடையது' என்ற எண்ணமே பந்தம்; 'என்னுடையதன்று' என்பதே மோட்சம். அது போலவே இந்த உடலும் பொருளும் வீடும் அரசும் என்னுடையதன்று என்பது நிச்சயம்.

5. வித்யையாலும் தவத்தாலும் யோகப் பயிற்சியாலும் மனம் ஜயிக்கப்பட்டால், இயற்கையாகச் சித்தத்தில் முளேக்கும் காமம் கோபம் முதலியவை இல்லாமற் போகும்.

6. கனவில் எவனும் இது பிரமை என்று நிச்சயமாக அறிவதில்லே. அப்படித்தான் மாயையின் லீலேயும் அறிய முடியாதது.

7. ஆத்மாவிற்கு உதவியாகத் தந்தையும் தாயும் நிலேத்திருப்பதில்லே; மனேவிகளும் புதல்வர்களுமில்லே; உற்ருர் உறவினரும் இல்லே; தர்மம் ஒன்றே ஒன்றுதான் நிலேத்து நிற்பது.

8. தர்மத்திற்குப் புறம்பான பொருளும் இன்பமும் எவை உண்டோ அவற்றைப் புறக்கணிக்க வேண்டும். தர்மமும் உலகைப் பகைத்துச் செய்யப்படுமானல் இன்பத்தைத் தராது.

9. எவன் துளசிபத்ர நீரால் அபிஷேகம் செய்து கொள்கிருனே அவன் எல்லாத் தீர்த்தங்களிலும் நீராடியவனுகவும், எல்லா யாகங்களிலும் தீட்சை பெற்றவனுகவும் ஆவான்.

10. விநாயகனே விக்கினங்கள் ஒழியவும், சூரியனே ஆரோக்கியத்திற்காகவும், அக்கினியைப் பரிசுத்தத்திற்காகவும், விஷ்ணுவைச் செல்வத்திற்





## தேவிபாகவதம் சொல்லுகிறது

காகவும், ஞானேசுவரனுன சிவனை ஞானத்திற்காகவும், சக்தியை முக்தி எய்தவும் மனிதன் பூஜிக்க வேண்டும்.

11. பெண் என்ற மாயையாகிய முப்புரிக் கயிற்றினுல் எவன் கட்டுப் பட்டுத் துன்பத்திற்கு உள்ளாக வில்லையோ அவனே வித்வான்; அவனே புத்திசாலி; அவனே சாஸ்திரங்களைக் கரை கண்டவன்.

12. ஒரு பற்றற்ற சந்நியாசி எந்தச் சுகத்தை அடைகிருனே அந்தச் சுகத்தை இந்திரனும் அடைவதில்லை. மூன்று உலகங்களிலுமுள்ள செல் வத்தை அடைந்தவனுக இருந்தாலும், இந்தச் சம்சாரத்தில் சந்நியாசியை விட வேறு எவன்தான் சுகமடை கிருன்?

13. உயரப் படுத்துத் தூங்குபவன் கீழே விழுவான்; கீழேயே தூங்கு பவன் விழமாட்டான். சந்நியாசி யாகித் தவறி விழுந்தால் மீண்டும் ஈடேற அவனுக்கு வழியில்லை.

14. விதித்த கர்மங்களைச் செய்து கொண்டு, பயனில் சிந்தையைத் துறந்து, ஆத்மலாபத்தில் சந்தோ ஷத்தை அடைந்து வாழ்பவன் முக்தி அடைகிருன்.

15. புருஷனை விடாமல் பிடித்துக் கொள்வதனுலேயே (கிரகித்துக் கொள்வதனுலேயே) வீட்டிற்கு க்ருஹம் என்ற பெயர் ஏற்பட்டது போலும்.

16. மனிதர்களின் பந்தத்திற்கும் மோட்சத்திற்கும் காரணம் மனமே யன்றி உடலோ, ஜீவாத்மாவோ, இந்திரியங்களோ அன்று.

17. மாயையின் குணங்களால் ஆக்கப்பட்ட பொய்யான இந்தச் சம்சாரத்தில், உடல் படைத்தவர் களில் சுகமுள்ளவன் என்று ஒருவனும் இல்லை, இருந்ததுமில்லை, இருக்கப் போவதுமில்லை.

18. ஆத்மா எப்போதுமே பரிசுத்த மானது, முக்தி நிலையில் இருப்பது. அது ஒருபோதும் கட்டுப்படாதது. பந்தமும் மோட்சமும் மனதுடன் சம்பந்தப்பட்டவை; அது சாந்த மானுல் ஒருவன் சாந்தியடைகிருன்.



மெய்ஞ்ஞான உணர்ச்சிதான் மனிதனுக்கு அவனிடம் இருக்கும் தெய்வத்தன்மையை நினைவூட்டி அவனைக் கருணுமூர்த்தியான கடவுளின் பிரதிநிதியாக வாழச் செய்கிறது. அன்பு, அருள், ஜீவகாருண்யம், பரோபகாரம், சாந்தம், சத்தியம், தியாகம் என்ற எல்லா நற்குணங் களுக்கும் ஆதாரம் மெய்ஞ்ஞானம்தான். —**நாமக்கல் கவிஞர்**

•••••

கங்காஸ்நானம் செய்வது பத்து அச்வமேத யாகத்திற்குச் சமம் என்கிறது பாகவதம், ஐந்தாவது ஸ்கந்தம். எல்லாப் பாவங்களையும் தீர்த்துப் புண்ணியங்களைச் சேர்த்துத் தந்து மோட்சத்திற்கு வழி செய்கிறது கங்கை என்று பத்மபுராணம் கூறுகிறது.

•••••

கங்கைநீர் பல வருஷங்கள் ஆனுலும் கெடாத தன்மை உடையது. அது கிருமிநாசினி. ரோகங்களைக் குணப்படுத்தும் பல நுண்ணிய ரசாயன சக்தி அதற்கு இருக்கிறது என்று விஞ்ஞானிகள் கண்டறிந் துள்ளனர்.

•••••

உத்தமனது கோபம் ஒரு கணம். மத்திமனது கோபம் இரண்டு மணி நேரம். அதமனது கோபம் இரவும் பகலும். சண்டாளனது கோபம் சாகும்வரை நிலைத்திருக்கும். —**கிருபானந்த வாரியார்**

# செய்திகள்

*கோலாலம்பூரில் ஸ்ரீராமகிருஷ்ண சாரதா பெர்ஸட்டுவன் (சங்கம்) இயங்கி வருகிறது. இந்தச் சங்கத்தின் அழைப்பின் பேரில் சுவாமி தபஸ்யானந்தரும் சுவாமி ராகவேசானந்தரும் மலேஷியா சென்றிருந்தார்கள்.

மலேஷியாவிலும் சிங்கப்பூரிலுமாக அவர்கள் இருபது நாள் சுற்றுப் பிரயாணம் செய்து சிரம்பன், மலாக்கா, சுங்கை சிப்புட் போன்ற பல வேறு இடங்களில் சொற்பொழிவு நிகழ்த்தினர்.

ஆகஸ்ட் 22-ஆம் தேதி சென்னையிலிருந்து புறப்பட்டு, செப்டம்பர் 12-ஆம் நாள் அவர்கள் மீண்டும் சென்னை திரும்பினர்.

ஆகஸ்ட் 22 முதல 31 தேதி வரை அவர்கள் கோலாலம்பூரில் தங்கியிருந்தனர். அப்போது ஸ்ரீராமகிருஷ்ண சாரதா சங்கத்தில் ஸ்ரீராமகிருஷ்ணர், சாரதா தேவியார், விவேகானந்தர், பகவத்கீதை, பாகவதம் போன்ற தலைப்புக்களில் ஒவ்வொரு நாளும் சுவாமி தபஸ்யானந்தரின் சொற்பொழிவுகள் நடைபெற்றன.

ஆகஸ்ட் 31 ஆம் தேதி ஸ்ரீகிருஷ்ண ஜன்மாஷ்டமி விமரிசையாகக் கொண்டாடப்பெற்றது. அன்றைய தினம் கோலாலம்பூர், ஸ்ரீராமகிருஷ்ண-சாரதா சங்கத்தில் சுவாமி ராகவேசானந்தர் பகவத்கீதையையும் விஷ்ணு சகஸ்ரநாமத்தையும் முழுமையாகப் பாராயணம் செய்தார்; பகவான் ஸ்ரீகிருஷ்ணரின் திருவுருவத்திற்கு, சகஸ்ர அர்ச்சனை செய்தார். சுவாமி தபஸ்யானந்தர், 'ஸ்ரீகிருஷ்ணரின் அவதார தத்துவம்' குறித்து உரையாற்றினார்.

ஆகஸ்ட் 8-ஆம் தேதி சுவாமி தபஸ்யானந்தரும் சுவாமி ராகவேசானந்தரும் சிங்கப்பூருக்குச் சென்று அங்குள்ள ராமகிருஷ்ண மடத்தில் தங்கினர். அங்கு 11-ஆம் தேதி தபஸ்யானந்தர். 'ஸ்ரீமத் பாகவதமும் புராணங்களும்' என்ற தலைப்பில் உரை நிகழ்த்தினார்.

## இலங்கை அகதிகளுக்கு நிவாரணப் பணி-
## ஒரு வேண்டுகோள்

செப்டம்பர் 6-ஆம் தேதியிலிருந்து ராமேச்வரம் அருகிலுள்ள மண்டபத்தில், இலங்கை அகதிகளுக்கான நிவாரணப் பணிகளை ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் ஏற்று நடத்தி வருகிறது.

இதுவரை சமையல் பாத்திரங்கள், பாய்கள், துணிகள், நாள்தோறும் சமைத்த உணவு, மருந்து வகைகள் போன்றவை அகதிகளிடையே விநியோகிக்கப்பட்டன. இவற்றின் மதிப்பு ரூ. 80,000.

இதுவரை நன்கொடையாக வசூலான தொகை ரூ. 56,000.

இலங்கை அகதிகளின் புனருத்தாரணத்திற்குப் பணமாகவோ, பொருள்களாகவோ நன்கொடை வழங்குவீர்.

செயலாளர்,
**ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் ஆசிரமம்**
(உதவி மற்றும் திரும்ப வாழ்வளித்தல்)
26, துரைசாமி ரோடு, சென்னை-600017

# அம்மையப்பன்



-வி. தியாகராஜன்

அறிவின் உருவம் இறைவன். அருளின் உருவம் அம்மை. அறிவும் அருளும் ஒன்றிய உருவாக, அர்த்த நாரீச்வரன் என்ற அம்மையப்பனுகப் பல ஞானிகள் இறைவனைக் கண்டனர்.

பாதி உமையுருவான பரமனைத் திருச் செங்கோட்டில் காணலாம்.

தேவார முதல்வரான திருஞான சம்பந்தருக்கு இறைவன் அம்மையப் பனுகக் காட்சியளித்தார்.

சீகாழிப் பிள்ளையார் குளக்கரையில் அழுதபோதே, 'அம்மே, அப்பா' எனக் கூவியழுதார்.

''செம்மேனி வெண்ணீற்றூர் திருத் தோணிச் சிகரம் பார்த்து 'அம்மே! அப்பா!' என்றென்று அழைத்தருளி அழுதருள'' என்பது சேக்கிழார் திரு வாக்கு. பாலளித்த பரிவையும் கருணை யையும் யாவருக்கும் தந்தை தாய் எனும் இவர் இப்படி அளித்தார் என்று குறிக்கிறூர்.

'தோடுடைய செவியன்' என்று தேவாரம் பாடலானுர் சம்பந்தப் பெருமான்.

வேதத்தில் முக்கியமான மந்திரங் களில் ஒன்று கா்யத்ரி. அது 'த' என்ற எழுத்தில் ஆரம்பித்து 'த்' என்ற எழுத் தில் முடிவடைகிறது. எனவே 'த்' என்ற தகர ஒற்றெழுத்தை ஓங்காரத் துடன் சேர்த்துத் 'தோ' என்ற எழுத் தில் தொடங்கினுர். மேலும், வேதத் திற்கு நிகரான தேவாரத்தைப் பாடும் மொழியான தமது தாய்மொழியான தமிழின் முதலெழுத்தான 'த' என்ற எழுத்தின் ஒற்றெழுத்தான 'த்' என்ற எழுத்துடன் ஓங்காரத்தை ஏற்றித் 'தோ' என்று தொடங்கினுர் என்பர்.

'தோடுடைய செவியள்' என்று சொல்லாமல் தோடுடைய செவியன் எனக் கூறியது, ஒரு காதில் தோடும் ஒரு காதில் குழையுமுள்ள அம்மையப்பனுகக் காட்சி கிடைத்ததனுல் என்று பொருள் படுகிறது.

திருஞானசம்பந்தரின் முதல் திரு முறை 'தோடுடைய செவியன்' என்று தொடங்கி, கடைசித் திருமுறையான சேக்கிழாரின் திருத்தொண்டர் புராணம் 'உலகெலாம்' எனப் பூர்த்தியாவதைக் காண, உலகம் முழுவதும் அம்மையப் பனே விளங்குகிறூர் என்பதை நமக்குத்

## சந்தாதாரர்கள் கவனிக்க

* சந்தா எண் 1,20,001 முதல் 1,20,385 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை நவம்பர் மாதத்துடன் முடிவடைகிறது. பத்திரிகையைத் தொடர்ந்து அனுப்ப, அடுத்த ஆண்டுச் சந்தாத் தொகை ரூ. 15ஐ நவம்பர் 25-ஆம் தேதிக்குள் அனுப்பி வைக்குமாறு கேட்டுக்கொள்ளுகிறோம்.

* சந்தா எண் 1,30,001 முதல் 1,31,169 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை டிசம்பர் மாதத்துடன் முடிவடைகிறது.



தெளிவுபடுத்துகிறது. இத்தகைய திருக் கோலத்தைப் பலர்பல விதமாகக் கண்டு களித்தனர்.

திருவிடைமருதூரில் பட்டினத்தடி களுக்கு மகாலிங்கப் பெருமான் அம்மை யப்பனுகக் காட்சியளிக்க, அந்த அழகிய காட்சியைத் திருவிடைமருதூர் மும் மணிக்கோவை என்ற நூலில் அடி முதல் முடி வரை வருணித்துப் பாடித் தாமும் அனுபவித்துத் தமிழகமும் அந்தப் பேற்றைக் கவிதைக் கண்ணுடி மூலம் பெற்று மகிழச் செய்தார் அந்தப் பெருந்தகை.

இன்னேர் அதிசய அழகு—நாமெல் லாம் அம்மையப்பனுக இறைவனைத் தரிசிக்க முடியும். அம்மையோ அப்பனே தமது இந்த அதிசயத்தைக் கண்டதில்லை என்பதைப் பரஞ்சோதி தமது திருவிளை யாடலில், அம்மை சிவபெருமானைக் கண்டபோது, தன் வலப் பாதியைப் பிராட்டி கண்டாள் என்கிருர்.

எனினும், கண்ணுடியில் ஒரு நாள், அலங்காரம் செய்துகொண்டபோது



அம்மையப்பரான முழு உருவத்தைக் கண்டதைப்பற்றி மகாவித்துவான் மீனுட்சிசுந்தரம்பிள்ளையவர்கள் அழகிய கற்பனை அடங்கிய ஒரு பாடலைப் பாடு கிருர்.





''இறைவனது இடப்புறம் பிரியாமல் வாழும் நீ, அலங்காரம் செய்துகொள்ளும்போது, உன் அடியவர்களானதேவர் கண்ணாடி காட்ட, கண்ணாடி தலை கீழாகக் காட்டும். இறைவனது வலப் புறத்தில் ஒரு பெண் இருக்கிறாள் போலும் என்று ஏதோ நினைவில் அவருடன் பிணங்க வேண்டாம். கண்ணாடி தான் குற்றமுள்ளது. இறைவனது குற்றமில்லை'' என்கிறார்.

இறைவன் வாமத்துறையும் நீ
தொழில்செய்
இமையவர் தருப்பணம் காட்ட
மறைவின் மற்றதனை நோக்கி அவ்
விறைவன்
வலப்புறத்து ஒரு மடக்கொடி நன்கு
உறைவதென்? என மற்று அவனொடு
பிணங்கேல்
உற்று நோக்கிடில் பிழை இல்லான்
கறைமலி களத்தன் வளத்
திருவானைக்கா
அகிலாண்ட நாயகியே.

—அகிலாண்டநாயகி மாலை.

இதே திருக்கோலத்தை அனுபவிக்கிறார் அப்பர் சுவாமிகள், ''உலகத்தில் அரைக் கண் உடையவரே இல்லை. அம்மை பராசக்தியைத் தன் உடலில் பாதியாக ஏற்ற இறைவன் தன் பாதியை அவளுக்கு அளிக்க, தன் மூன்று கண்களில் பாதியாகிய ஒன்றரைக் கண்ணை அவளுக்கு அளித்தமையால், ஒன்றரைக் 'கண்ணன் கண்டீர் ஒற்றியூர் உறை உத்தமனே' என்கிறார்.

திருக்களந்தை என்ற ஊரிலே பல பட்டடைச் சொக்கநாதப் புலவர் என்பவர் இறைவனிடம் பேசுகிறார்—''இறைவனே! இந்த ஊரிலுள்ள அடியார்களை ஆட்கொள்ள வேண்டும் என்பதற்காக இவ்வூரை விட்டுப் பிரியமாட்டேன் என்கிறாய். பரவாயில்லை. அம்மையை இடப் புறத்திலே கொண்டுள்ளாய். அவளது வலப் பக்கம் தனியாக உள்ளது. உன் இடப்புறமும் தனியாகிவிட்டது. எனவே அம்மையினது வலப்புறமும் உன் இடப் புறமும் கொண்ட உருவத்தைச் சேர்த்து என் உள்ளத்திலே வீற்றிருந்தால் திருக்களந்தையிலும் இருக்கலாம்; என்நெஞ்சிலும் இருக்கலாமே!'' என்று கேட்கிறார்.

ஒரே உருவில் இறைவன் அம்மையப்பனாகக் காட்சி கொடுத்த அழகை அருணாசல புராணம்—

பச்சை வன்னம் மற்றொரு புறம் ஒரு
புறம் பவளம்;
கச்சுலா முலை ஒரு புறம்; ஒரு புறம்
கவின் மார்பு;
அச்சம் நீக்கிய வரதம் ஒன்று; அபய
மொன்று அங்கை;
இச்சையாம் இவர் உறுதல் கண்டு
இறைஞ்சினர் இமையோர்.

இத்தகைய அம்மையப்பரே உலகுக்கு அம்மையப்பர். அவர் தாள் வணங்கி வாழ்வாங்கு வாழ்வோம்.

## ... ரமணர் வாக்கு...

தனக்காகச் செய்யும் காரியங்களை விலக்குவதே துறவு. ஒரு குடும்பத்தை விட்டு வருகிற துறவிக்கு உலகமே குடும்பமாகிவிடுகிறது.

எண்ணங்களிலிருந்து எவ்வளவு விடுபட்டிருக்கிறோமோ, அவ்வளவு ஆன்மநெறியில் முன்னேறியிருக்கிறோம் என்று கொள்ளலாம்.



ஆனால் ஆத்மா என்றும் சுயம்பிரகாசமாகவே இருக்கிறது. அதில் ஒன்றும் முன்னேற்றமோ பின்னடைதலோ இல்லை. தடைகளின் நீக்கமே முன்னேற்றம் என்று சொல்லப்படுகிறது.

ஆதலின் எண்ணங்களின் எழுச்சிக்கு இடம் கொடுக்காமல் அகந்தையின் மூலத்தில் நிலைபெற்றால், ஆத்மநிலை தடையின்றி விளங்கும்.

—ரமண மகரிஷி



# நூல் அறிமுகம்

**1. தெய்வத் திருவிளையாடல்கள்**

திருவிளையாடல் புராணத்தின் அடிப்படையில் எழுதப்பட்ட உரை நடை நூல். பக்கம் 172—ரூ. 8

**2. தெய்வத் திருஅவதாரங்கள்**

திருமாலின் பத்து அவதாரங்களை யும் விளக்கும் நூல். பக்கம் 211—ரூ. 10

மேலே குறிப்பிட்ட இரண்டு நூல் களுக்கும்

**ஆசிரியர் : திருமருகல் சிங்காரவேலனார்**

அருணோதயம், 3, கௌடியா மடம் சாலை, ராயப்பேட்டை, சென்னை—600 014.

**3. தியானம் ஞானம் மோனம்**

பக்கம் 96—ரூ. 6

**4. அருட்சுவை அளிக்கும் ஆறு படைவீடு**

முருகன் கோயில் கொண்டிருக்கும் ஆறு படைவீடுகளிலுள்ள கோயில்கள் ஐதீகங்கள் ஆகியவற்றை விளக்கும் நூல். பக்கம் 96—ரூ. 5

மேலே குறிப்பிட்ட இரண்டு நூல்களுக்கும்

**ஆசிரியர் : மிழலைத்தொண்டன்**

**5. புண்ணிய பாரதத்தின் புராணக் கதைகள்**

விநாயகபுராணம், சிவமகாபுராணம், சூரிய புராணம், கூர்மபுராணம், தேவி பாகவதம் ஆகியவற்றிலிருந்து தொகுக்கப்பட்ட ஒன்பது கதைகளைக் கொண்ட நூல். பக்கம் 96—ரூ.5

**ஆசிரியர் : நாகர்கோயில் கிருஷ்ணன்**

**6. மதங்களும் மகத்துவங்களும்**

பௌத்தம், சமணம், இஸ்லாம், சீக்கியம், கிறிஸ்தவம், பார்ஸி, இந்து மதங்களைப் பற்றிய நூல். பக்கம் 110-ரூ. 7 **ஆசிரியர் : அம்மன் சத்தியநாதன்**

மேலே கூறிய நான்கு நூல்களையும் வெளியிட்டோர்: மயிலவன் பதிப்பகம், 7, எம். கே. அம்மன் கோயில் தெரு, மயிலாப்பூர், சென்னை—600 004.

**7. மனீஷா பஞ்சகம்**

ஆதிசங்கரர் அருளிய இந்த நூல் தமிழ் வியாக்கியானத்துடன் வெளி யிடப்பட்டுள்ளது. பக்கம் 119—ரூ. 10

**ஆசிரியர் : தேதியூர் சுப்ரமண்ய சாஸ்திரிகள்**

ஸ்ரீசங்கர குருகுலம், அபிராமபுரம், சென்னை—600 018.

**8. பாண்டிமாதேவி**

திருஞானசம்பந்தரின் பாடல்கள், பெரிய புராணம், திருவிளையாடல் புராணம் ஆகியவற்றின் அடிப்படை யில் எழுதப்பெற்றிருக்கும் குறுங் காவியம். பக்கம் 95—ரூ.6

**9. திருஞானசம்பந்தர் சிறுவர் கவியரங்கில்**

குழந்தைக் கவிதை. பக்கம் 72-ரூ. 4

மேலே குறிப்பிட்ட இரண்டு கவிதை நூல்களுக்கும்

**ஆசிரியர் : அரு. சோமசுந்தரன்**

பொன்முடி பதிப்பகம், 123, முத்துப்பட்டணம் 3-ஆவது தெரு, காரைக்குடி.

**10. தமிழ்க் கலைக்களஞ்சியம்-தொகுதி 9&10**

'தமிழ்க் கலைக்களஞ்சியம்' என்ற பெயரில் 10 தொகுதிகள் வெளியிடப் பெற்றன. அவற்றுள் 9, 10 ஆகிய இரண்டு தொகுதிகளும் விற்பனைக்குக் கிடைக்கும். ஒவ்வொரு தொகுதியும் 750 பக்கங்கள். தொகுதி ஒன்றின் விலை ரூ. 25.

தமிழ் வளர்ச்சிக் கழகம், (ஸ்டேட் பாங்கு மேல் மாடி), பல்கலைக்கழகக் கட்டிடம், சேப்பாக்கம், சென்னை—600 005.

# மகான் ராம்பிரசாத்

—எம். வேங்கடராமன்

கல்கத்தாவுக்கு வடக்கே 34 மைல் தூரத்தில் காமார்ஹாட்டி என்ற சிறிய கிராமம் இருக்கிறது. இந்தக் கிராமம் கங்கைநதிக் கரையில் அமைந்துள்ளது.

ஹாலிசஹர் என்று அழைக்கப்பட்ட இந்தக் கிராமத்திற்கு, காமார்ஹாட்டி என்ற புதுப் பெயர் வந்ததே ஒரு வேடிக்கையான கதை.

அந்தக் காலத்தில் நவத்வீபம் என்ற நகரம்தான் கல்வி கேள்விகளுக்கு மிகவும் சிறந்து விளங்கியது.

ஒரு சமயம் நவத்வீபத்தைச் சேர்ந்த சில பண்டிதர்கள் சாஸ்திரங்களைக் குறித்துத் தர்க்கம் செய்வதற்காக ஹாலிசஹர் கிராமத்திற்கு வந்தார்கள்.

இந்தப் பண்டிதர்களோடு தர்க்கம் செய்வது கடினம் என்பதை அறிந்து கொண்ட ஹாலிசஹர் கிராமத்துப் பண்டிதர்கள் ஒரு தந்திரம் செய்தார்கள். ஓர் இளம் குயவனை இளம்பெண் போல வேஷம் போடச் சொல்லி, அவனை அந்தப் பண்டிதர்களுக்கு வேலைக்காரி யாக அமர்த்தினர். இன்னொரு பையன் அந்த வேலைக்காரியின் மகன் என்று சொல்லிக்கொண்டு அவனும் அங்குப் போய்ச் சேர்ந்தான்.

அடுத்த நாள் காலை, காகங்கள் 'கா, கா' என்று கரைய ஆரம்பித்ததும், சிறுவன் தன் தாயைப் பார்த்து, ''அம்மா! இந்தக் காகங்கள் ஏன் கத்து கின்றன?'' என்று கேட்டான்.

''வேலைக்காரியாகிய நான் என்னத் தைக் கண்டேன்! இந்த நவத்வீப பண்டிதர்களைக் கேள்'' என்று அவள் பதில் சொன்னாள்.

ஆனால் பண்டிதர்களோ, தங்களுக்கும் இதற்குப் பதில் தெரியாது என்று சொல்லிவிட்டனர்.

உடனே பையன் தாயை வற்புறுத் தவே, அவள் ஒரு சம்ஸ்கிருத சுலோகத் தைச் சொன்னாள். அதன் பொருள்— ''சூரியன் கருமையான இருட்டை அழிக்கிறது. நாங்களும் கருமையாக இருப்பதனால், சூரியன் எங்களையும்



ஹாலிசஹர் பண்டிதர்களின் தந்திரம்

அழித்துவிடுமோ என்று காகங்கள் கரைகின்றன.''

இதைக் கேட்டு, அந்தப் பண்டிதர்கள், 'ஒரு வேலைக்காரியே இத்தனை பண்டிதை யாக இருந்தால் இந்த ஊர்ப் பண்டி தர்கள் எத்தனை கெட்டிக்காரர்களாக இருப்பார்கள்!' என்று பயந்து, நவ த்வீபத்திற்குத் திரும்பினார்கள்.

அது முதற்கொண்டு ஹாலிசஹர் கிராமத்திற்குக் 'காமார்ஹாட்டி' அதாவது 'குயவன் சந்தை' என்ற பெயர் வழங்கலாயிற்று.

இந்தக்கிராமத்தில்தான் ராம்பிரசாத் 1723-ஆம் ஆண்டு பிறந்தார். ராம்ராம் ஸேன் என்ற அவரது தகப்பனர் ஆயுர் வேத வைத்தியரும் சிறந்த சம்ஸ்கிருத பண்டிதருமாவார். ராம்பிரசாதின் தாய் ஸித்தேச்வரி தன் கணவருக்கு இரண்டாவது மனைவி.

அந்தக் கிராமப்பள்ளியில் சேர்க்கப் பட்ட ராம்பிரசாத் நன்கு படித்துச் சிறந்த மாணவராக விளங்கினர்.

மகன் தன் தொழிலை மேற்கொள்ள வேண்டும் என்று ஆசைப்பட்ட ராம்ராம் ஸேன் தம் மகனைப் பிறகு ஒரு சம்ஸ் கிருதப் பள்ளியில் சேர்த்தார்.

வெகு சீக்கிரமே வியாகரணம், காவியம் முதலியவற்றைக் கற்றுத் தேர்ந்த ராம்பிரசாத் ஆயுர்வேதத்தில் எவ்வகை அக்கறையும் காட்டவில்லை. அதற்காகத் தகப்பனர் அவரைப் பாரசீக மொழியையும் ஹிந்தி மொழியையும் கற்றுக்கொள்ளச் சொன்னர். அப்போது வங்காளம் முஸ்லிம் ஆட்சியில் இருந்த தனல், இந்த மொழிகளைக் கற்றுக் கொள்வது மகனுக்கு வேலை தேடிக் கொடுக்கும் என்று தகப்பனர் நம்பினர்.



ராம்பிரசாதுக்கு ஆயுர்வேதத்தில் நாட்டம் செல்லவில்லை.

பதினெட்டாவது வயதிலிருந்தே ராம் பிரசாத்திடம் லௌகிக விஷயங்களில் பற்றின்மை தோன்ற ஆரம்பித்தது. இதைக் கண்ட அவரது பெற்றோர், 'பையனுக்குத் திருமணம் செய்து வைத்தால் சரியாகி விடுவான்' என்று நினைத்தனர்.

எனவே அவர்கள் சார்வனி என்ற பெண்ணை ராம்பிரசாதுக்குத் திருமணம் செய்து வைத்தனர்.



மகனின் விரக்தியைக் கண்டு கவலையுற்றனர் பெற்றோர்.

இல்லற வாழ்க்கையில் ராம்பிரசாதுக்கு இரண்டு பிள்ளைகளும் இரண்டு பெண்களும் பிறந்தனர். எனினும் அவர் எப்பொழுதும் காளிதேவியைக் குறித்துத் தியானத்தில் ஆழ்ந்திருப்பார்.

ஒரு நாள் ஆகமவாகீசர் என்ற தாந்திரிக முனிவர் அந்தக் கிராமத்திற்கு வந்தார். விரைவிலேயே ராம்பிரசாத் அவரது சிஷ்யராகி, தாந்திரிகச் சாதனைகளைக் கற்றுக்கொண்டார்.

சிறிது காலத்திற்குப் பிறகு ஆகமவாகீசர் அந்தக் கிராமத்தை விட்டுச் சென்றுவிடவே ராம்பிரசாத் மீண்டும் ஆன்மிகச் சாதனைகளில் ஈடுபட ஆரம்பித்தார்.



ஆகமவாசீசரும் ராம்பிரசாதும்

திடீரென்று ஒரு நாள் ராம்பிரசாதின் தகப்பனர் காலமாகிவிடவே, குடும்பத்தை எப்படி நடத்துவது என்று தெரியாமல் ராம்பிரசாத் தவித்தார். அதனல் அம்பிகையை நோக்கி அடிக்கடி மனம் உருகிப் பாடலானர்.

கடைசியில் ராம்பிரசாத் பிழைப்பைத் தேடிக் கல்கத்தா சென்ருர்.

ஏதாவது பிழைப்பைத் தேட வேண்டும் என்று ஒரு பக்கம் அவரை இந்த உலகப் பற்று இழுத்தது. மறு பக்கம் சாதனைகள் செய்ய வேண்டுமென்று ஜகன்மாதா காளிதேவியின் மீது அவர் கொண்டிருந்த தெய்விகப் பற்று இழுத்தது.

கடைசியில், மாதம் முப்பது ரூபாய் சம்பளத்தில் துர்க்காசரண் மித்ரர் என்பவர் வீட்டில் அவருக்குக் குமாஸ்தா வேலை கிடைத்தது.

உடனே அவர் மகிழ்ச்சி தாங்காமல் காளிதேவியைக் குறித்துப் பாடலானர். நாளடைவில் கணக்குகள் எழுத வேண்டிய நோட்டுப் புத்தகங்களில் அன்னை காளியைப்பற்றிய பாடல்களை எழுதலானர்.

இதைக் குறித்துப் புகார்கள் துர்க்கா சரண் மித்ரருக்குச் சென்றன. முதலில் அவர் இந்தப் புகார்களைக் காதில் போட்டுக்கொள்ளவில்லை. ஆனல் நாளடைவில் புகார்கள் அதிகரிக்கவே, ஒரு நாள் ராம்பிரசாதைக் கூப்பிட்டு அனுப்பிக் கணக்குப் புத்தகங்களைப் புரட்டிப் பார்த்தார்.

அதில் ஓர் இடத்தில் பராசக்தியைப் பிரார்த்திக்கும் வகையில் அமைந்த கீழ்க்கண்ட வரிகளைக் கண்டார்—

**நான் உனது சம்பளமில்லாத சேவகன்.**
**உன் திருவடிகளின் புழுதி ஒன்றுதான்**
**எனக்கு உரிமை.**

இந்த வரிகளைக் கண்டதும் துர்க்கா சரண் மித்ரரின் கண்களில் நீர் மல்கியது.

அவர் ராம்பிரசாதைப் பார்த்து மிகவும் கனிவான குரலில், ''ராம்பிரசாத்! நீ இந்த உலகத்தைச் சேர்ந்தவன் அல்ல; தெய்விக உலகத்தைச் சேர வேண்டியவன். கணக்குப் புத்தகங்களைப் பாழாக்கிவிட்டாய் என்று கவலைப் படாதே. நீ எழுதிய பாட்டுகளினல் என் கணக்குப் புத்தகங்கள் புனிதமடைந்தன. அவை என்றும் உன் ஞாபகார்த்தமாக என் குடும்பத்தில் போற்றிப்

பக்தி என்பது இறைவனையும் ஜீவனையும் இணைக்கும் சூத்திரம்.
—**சைதன்யர்**

மனம், வாக்கு, உடல் ஆகிய மூன்றும் ஒரேமாதிரி உள்ளவர்கள் மகாத்மாக்கள். இந்த மூன்றிலும் வேறுபாடு உள்ளவர்கள் துராத்மாக்கள்.
—பீஷ்மர்

நாம் எல்லோரும் எல்லாக் காரியங்களையும் செய்துவிட முடியாது.
—வர்கில்

பாதுகாக்கப்படும். நீ வீட்டுக்குச் சென்று உன் ஆத்ம சாதனங்களில் ஈடுபடு. உன் சம்பளம் என்றும் உன் வீடு தேடி வரும்'' என்றார்.

இதைக் கேட்டதும் ராம்பிரசாத் மெய்ம்மறந்து தமது இஷ்ட தெய்வமான காளியைக் குறித்துப் பாட ஆரம்பித்தார்.

குடும்பத்திற்காகச் சம்பாதிக்க வேண்டும் என்ற கவலை நீங்கிவிட்டதனால் ராம்பிரசாத் முழு நேரமும் ஆத்ம சாதனைகளில் ஈடுபடுவதும், மெய்ம் மறந்து பக்திப் பாடல்களைப் பாடுவதுமாக இருந்தார்.

அடிக்கடி கங்கை நதியில் தண்ணீரில் நின்றுகொண்டு அவர் பாடுவது வழக்கம். அவ்விதம் ஒரு நாள் அவர் பாடிக்கொண்டிருந்தபோது நவத்வீபத்தின் மகாராஜா கிருஷ்ணசந்திரர் தமது படகில் சென்றுகொண்டிருந்தார். ராம்பிரசாத் பாடிய பாடலைக் கேட்டு மயங்கிய மகாராஜா படகை நிறுத்தச் சொல்லி, ராம்பிரசாத். பாடுவதை நிறுத்தும் வரையில் அவரது பாட்டைக் கேட்டுக்கொண்டிருந்தார்.



மன்னர் படகை நிறுத்திப் பாடலைக் கேட்டார்.



ராம்பிரசாத் காளியைக் குறித்துப் பாட ஆரம்பித்தார்.

மகாராஜா கிருஷ்ணசந்திரர் கவிஞர்களுக்கும் அறிஞர்களுக்கும் ஆதரவு கொடுப்பவர். அவரது அரசவையில் அனேக கவிஞர்கள் இருந்தார்கள்.

மகாராஜா ராம்பிரசாதை அணுகி, ''தாங்களும் எனது அரசவையை அலங்கரிக்க வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டார்.

ஆனால் ராம்பிரசாதோ மன்னரின் அழைப்பை ஏற்க மறுத்துவிட்டார். காரணம், தெய்வபக்தியில் ஆழ்ந்து ஈடுபட நினைக்கும் தமக்கு மன்னரின் வேண்டுகோளை ஏற்பதும் ஒரு பந்தமாக ஆகிவிடும் என்று அவர் நினைத்தார்.

ஆனால், மகாராஜா கிருஷ்ணசந்திரர் அவரை விடவில்லை. நூறு காணி நிலத்தைப் பெற்றுக்கொள்ள வேண்டும் என்று ராம்பிரசாதை வற்புறுத்தி அவர் கொடுத்தார். (தொடரும்)



# விளக்கு ஏற்ற வேண்டும்

ஒரிஸ்ஸாவில் கிருஷ்ணசந்திரன் என்ற சிற்றரசன் கொடுங் கோலாட்சி நடத்தி வந்தான். 'இன்பத்தை அனுபவிப்பதே வாழ்வின் பயன்' என்ற எண்ணத்தோடு அவன் நாட்களைக் கழித்து வந்தான்.

ஒரு நாள் அருகிலுள்ள கிராமத்தில் சில வேலைகளைக் கவனிக்க அந்த அரசன் சென்றிருந்தான். மாலையில் அரண்மனைக்குத் திரும்பிக்கொண்டிருந்தான்.

சாலையோரம் ஒரு முதியவர் தமது மகளுடன் சென்றுகொண்டி ருந்தார். மகள் தந்தையிடம், ''அப்பா! பகற்பொழுது போய்விட்டது. இரவு வந்துகொண்டிருக்கிறது. இன்னும் வீட்டில் விளக்கு ஏற்றவில்லை. வீட்டில் இருள் சூழ்ந்திருக்கும். வாருங்கள், விரைவாகப் போகலாம்'' என்று சொல்லிக்கொண்டே தந்தையுடன் விரைவாகச் சென்று மறைந்தாள்.

இந்தச் சொற்கள் அனைவரும் இயல்பாகப் பேசக்கூடியதுதான். ஆயினும் இதைக் கேட்ட அரசன் கிருஷ்ணசந்திரனுடைய உள்ளத்தில் அவை பெருமாறுதலை ஏற்படுத்தின. இன்ப வாழ்க்கையில் மூழ்கிக் கிடந்த அரசனுக்கு அவற்றில் ஆழ்ந்த கருத்து இருப்பதாகத் தோன்றியது.

''இந்தச் சிறுபெண் கூறிய வார்த்தைகளில் பெரிய உண்மை அடங்கியிருக்கிறது. என் வாலிபப் பருவம் கழிந்துவிட்டது. வாழ்க்கை யின் அந்திப்பொழுதை நெருங்கிவிட்டேன். ஆயினும் என் உள்ள மாகிய இல்லத்தில் அறிவு (ஞான) விளக்கை நான் ஏற்றி ஒளிபரவச் செய்யாமல் வாளா இருக்கிறேன். இந்த இருள் நிறைந்த வாழ்க்கைக் கடலைக் கடக்க எந்த ஏற்பாடும் செய்யாமல் இருக்கிறேன். என் மடமையை என்னவென்று சொல்வேன்!'' என்று கிருஷ்ணசந்திரன் ஆராய்ந்தான்.

உடனே அவன் இல்லறத்தைத் துறந்தான். பிருந்தாவனம் சென்றான். அவன் தன் செல்வத்தைக் கொண்டு கிருஷ்ணன் கோயிலைக் கட்டி முடித்தான். மிகுந்த செல்வத்தை எளியவர்களுக்கு வாரி வழங் கினான். தான் பிச்சையெடுத்து வாழ்க்கையை நடத்தினான். பிற்காலத் தில் அவனை மக்கள் அன்போடு 'லாலா பாபு' என்று அழைத்தார்கள்.

ஒரு சாதாரண சம்பவம் அவனது வாழ்க்கையையே மாற்றி அமைத்துவிட்டது.

—ரா. வி.



# ராமநாமத்தின் பெருமை

கி.வா. ஜகந்நாதன்

தசரதராமன் திருநாமத்தை இன்று உலகம் எல்லாம் கொண்டாடுகிறது. ராமநாமம் என்பது தசரதராமனது நாமத்தை மாத்திரம் குறிப்பது அன்று; அவனுக்கு ராமன் என்ற திருநாமம் சூட்டுவதற்கு முன்பும் இந்த நாமம் பல காலம் பழக்கத்தில் இருந்தது. மூன்று ராமர்கள் உண்டு. ஒருவர்-தசரத ராமனுக்கு முன்பு பிறந்த பரசுராமர்; மற்றொருவர்-கிருஷ்ணனுக்குத் தமையனாகப் பிறந்த பலராமர். நடுநாயகமாக இருப்பவன் தசரதராமன்.

ராமதாபிநீ உபநிஷத்து என்று ஒன்று உண்டு. ராமநாமத்தின் பெருமையைச் சொல்வது அது. ராமநாமத்தைத் தாரக மந்திரம் என்று சொல்லுவார்கள். ஆனால் ராமன் திருவவதாரம் செய்த பிறகு, பழைய ராம நாம நினைவே இல்லாமற் போய்விட்டது. ராமன் என்று சொன்னவுடன் தசரத ராமனின் கல்யாண குணங்களே நினைவுக்கு வருகின்றன.

ராமநாமத்தைப்பற்றித் தியாகராஜ ஸ்வாமிகள் ஒரு சமரசக் கருத்தைச் சொல்கிறார். அஷ்டாக்ஷரமாகிய 'ஓம் நமோ நாராயணாய' என்பதில் உள்ள 'ரா' அதற்கு உயிரைப் போன்றது. பஞ்சாட்சரமாகிய 'நம: சிவாய' என்பதில் உள்ள 'ம' அதற்கு உயிரைப் போன்றது. இந்த இரண்டு மந்திரங்களிலும் உள்ள 'ரா, ம' என்ற இரண்டு எழுத்தும் சேர்ந்து 'ராம' என்ற திருநாமம் வந்தது என்று ஒரு கீர்த்தனையில் பாடியிருக்கிறார்.

வேறு ஓரிடத்தில் நான் ஒரு கருத்தைப் படித்திருக்கிறேன். தசரதர் தமக்குக் குழந்தை பிறந்தவுடன் என்ன பெயர் வைப்பது என்று யோசித்தாராம். சிவபெருமான் திருநாமத்தையும் அம்பிகையின் திருநாமத்தையும் சேர்த்து ஒரு நாமம் இருந்தால் நல்லது என்று பெரியவர்கள் சொன்னார்கள். ஹரா உமா என்ற இரண்டையும் சேர்க்கிறபோது ராமா என்ற தொனி எழுந்ததாம். அதனால் ராம என்ற பெயரை வைத்தார்கள். இது பொருத்தமோ அல்லவோ, அதைப்பற்றிக் கவலை இல்லை. எப்படியோ ராம என்ற திருநாமம் சைவர்களுக்கும் வைணவர்களுக்கும் பொதுவாக, சிவபெருமானையும் உமாதேவியையும் இணைக்கும் தத்துவத்தைக் குறிக்கும் அறிகுறியாக இருக்கிறது என்பதை நாம் நினைத்தால் போதும்.

ராமனைக்காட்டிலும் ராமனுடைய திருநாமம் சிறப்புடையது என்று சொல்வார்கள். ராமன் சேதுவுக்கு அணை கட்டிக் கடக்க வேண்டியிருந்தது. ஆனால் ஆஞ்சநேயர் ராமன் திருநாமத்தை சொல்லித் தாமே கடந்துவிட்டார். ராமன் அருகில் இல்லாவிட்டால் உயிர் வாழ இயலாத பிராட்டி, ராமன் திருநாமத்தைச் சொல்லிக் கொண்டே அசோகவனத்தில் உயிர் வாழ்ந்தாள். அவள் தன்னுடைய உயிரை நீத்துவிட வேண்டும் என்று எண்ணித் தூக்குப் போட்டுக்கொள்ள ஒரு மாதவிப் பொதும்பருக்குச் சென்றாள். அப்போது அங்கே ஒரு மரத்தின் மேல் உட்கார்ந்திருந்த ஆஞ்சநேயர் அவள் நிலையைப்






பார்த்தார். இந்தச் சங்கடமான நிலையில் தம்மை எப்படி அவளிடத்தில் அறிமுகப்படுத்திக்கொள்வது என்று எண்ணினர். அதற்கு ஒரே ஓர் உபாயம் தான் தோன்றியது. ராம ராம என்று சொல்லிக்கொண்டு அவர் கீழே குதித்தார். பிராட்டிக்கு முதலில் அவன் அரக்கனே என்று ஐயம் தோன்றினலும் அந்தத் திருநாமம் அவளுக்கு உயிர்ப்பு ஊட்டியது; நம்பிக்கை ஊட்டியது. எப்போதும் அகத்திற்குள்ளே ராம நாமத்தை ஜபித்துக் கொண்டிருந்த அந்தப் பிராட்டி, அரக்கர்களுடைய கூட்டத்தின் நடுவிலே இருந்தமையினல் இதுவரை புறத்தில் அந்த நாமத்தைக் கேட்க வகையில்லாமல் இருந்தாள். இப்போது புறத்திலிருந்து அந்தத் திருநாமம் வந்தபோது அவள் செவியும் உள்ளமும் குளிர்ந்தன. அவள் உணர்வு உருகிற்று. அவள் உயிர்ப்புப் பெற்றாள். மனம் தேறினள். ஆஞ்சநேயரோடு பேசத் தொடங்கினள். கம்பன் இதைச் சொல்கிறன் — "எம்பிரான் நாமம் சொல்லி உருகினன், உணர்வைத் தந்தான், உயிரிதின் உதவியுண்டோ?"

சீதாபிராட்டி இத்தனை காலம் உயிர் தரித்து இருந்ததற்குக் காரணம் திருநாமம். உயிரைப் போக்கிவிடத் துணிந்த



போது அவ்வாறு போகவிடாமல் காப்பாற்றியதும் ராமனுடைய திருநாமமே. இப்படியே ராமநாமத்தினுடைய பெருமையைக் கம்பன் பல இடங்களில் சொல்கிறன்.

படித்தவன் மூடனுக்கும், கண் தெரிந்தவன் குருடனுக்கும், ஆரோக்கியமானவன் நோயாளிக்கும், பணக்காரன் ஏழைக்கும் உபகாரம் செய்ய வேண்டும். இதுவே எங்கும் நிறைந்துள்ள இறைவனுக்குச் செய்யும் பூஜையாகும்.

—கிருஷ்ணப்ரேமி

புண்ணியத் தலங்களுக்குப் பிரயாணம் சென்று வராத கால்கள்; இறைவனைக் குனிந்து வணங்காத தலை; கெஞ்சிக் கேட்பவர்களுக்குக் கொடுத்து உதவாத கைகள்; நல்லோரின் அறிவுரைகளைக் கேட்டுக் கிரகிக்காத காதுகள் ஆகியன இருந்தும் பயனற்றவை.

—விவேக சிந்தாமணி

இறைவன் நித்தியப் பொருள். ஒரு நீண்ட நூலில் ஆயிரம் மணிகள் கோக்கப்பட்டிருக்க அந்த நூல் அசைந்தால் மணிகள் ஆயிரமும் அசையும். அது போன்று எல்லா உயிர்களிலும் நீக்கமற நிறைந்துள்ள இறைவனுக்கு வாழ்த்துக்கள் கூறி நாம் பல்லாண்டு பாடுவோமாயின் எல்லா உயிர்களும் பல்லாண்டு வாழும். —கிருபானந்தவாரியார்



மீனாட்சி திருக்கோயில், மதுரை.

PON OLLI OFFSET PRESS